# ாரதியைப் பற்றி ஜீவா








ப. ஜீவானந்தம்



செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்,
1-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
சென்னை—600 098.

# முன்னுரை

## உண்மை; வெறும் புகழ்ச்சியில்லை

பிரபல பிரஞ்சு எழுத்தாளரான எமிலி ஜோலா கால மானபோது, அவரது சவ அடக்கத்துக்கு முன்னால், அங்கு குழுமி நின்ற எழுத்தாளர்களை நோக்கி, பிரபல நாவலாசிரிய ரான அனதோல் பிரான்ஸ் பின்வருமாறு கூறினார் : "இவரை (ஜோலாவை)க் கண்டு பெருமை கொள்ளுங்கள். ஏனெனில் இவர் மனித குலத்தின் மனச் சாட்சியின் ஒரு கணமாக வாழ்ந்தார்." ஆல்பிரெட் டிரேபஸ் என்ற ஒரு நிரபராதி அநியாயமாக நாடு கடத்தப்பட்டதை எதிர்த்துப், பல்வேறு எதிர்ப்புகளுக்கும் மத்தியில் எமிலி ஜோலா தன்னந்தனிமை யாகப் போராடிப், பல கஷ்ட நஷ்டங்களுக்குப் பின்னர் வெற்றி கண்டதை மனத்தில் கொண்டுதான் அனதோல் பிரான்ஸ் இவ்வாறு குறிப்பிட்டார். இந்தக் கூற்று ஓர் உண்மையைத் தெளிவாகக் கூறுகிறது: எழுத்தாளன் என் பவன் மனித குலத்தின் மனச் சாட்சியின் குரலாக ஒலிக்க வேண்டும் என்பதுதான் அந்த உண்மை.

தமிழ் இலக்கியத்தில் மகாகவி பாரதிக்கு முன்னும் பின்னும் மனித குலத்தின் மனச்சாட்சியின் குரலை ஏதோ ஒரு கணத்தில் ஒலித்த கவிஞர்கள் பலர் உண்டுதான். எனினும் அவர்களும்கூடப், பாரதியைக் கண்டு பொருமைப் பட வேண்டியவர்கள்தான். ஏனெனில் பாரதி மனித குலத்தின் மனச்சாட்சியின் குரலாக ஏதோ ஒரு கணத்தில் மட்டும் ஒலித்தவனல்ல; மாறாக, தனது இலக்கிய வாழ்க்கை முழுவதையுமே என்றென்றும் அத்தகைய குரலை ஒலிப் பதற்கே அர்ப்பணித்துக் கொண்டவன். மனித குலத்துக்கு இழைக்கப்படும் அநீதிகள் அனைத்தையும் எதிர்த்து, அவன் குரல் கொடுத்தான். மனிதர் யாவரும் சரிநிகர் சமானமாக வாழ வேண்டும் என்று வேட்கை கொண்டான். இந்தக் காரணத்தால்தான் அவன் ஏனைய எந்தவொரு தமிழ்க் கவிஞனையும் காட்டிலும், அதிகமான பேரும் புகழும் பெற்றிருக்கிறான். இவ்வாறு மனிதகுல த்தின் கவிஞனாக

பொதுமக்கள் வாழ்வோடு, தண்ணீரில் மீன் மாதிரிப் பழகிய பாரதி, தனது படைப்பாற்றல், படைப்புப் பணி முழுவதையும் மக்கள் விடுதலைக்கும் நல்வாழ்வுக்குமே தத்தம் செய்த பாரதி, இருபதாம் நூற்றுண்டைய மக்களின் - சிந்தனை ஓட்டங்களையும் உணர்ச்சிப் பெருக்குகளையும் அழகு சொட்டச் சித்திரிப்பதில் நேர் நிகரற்ற கலைஞனுகப் பொலிந்தான்.

பாரதிக்கு "நான்", "நாங்கள்" என்ற இரண்டு சொற்களும் ஒரே பொருளையே குறித்தன. பாரதியின் நல்லிசைப் புலமை, மாயகாவ்ஸ்கி என்ற சோவியத் மகாகவி கூறியதுபோல், "பிரபஞ்சம் முழுவதையும் சுற்றிப் பார்த்துக் களிக்கும் காதலை" விரும்பிற்று. புஷ்கினைப் பற்றி பெலின்ஸ்கி சொன்ன மாதிரி பாரதியின் கவிதை "என்றும் இருக்கிற எப்பொழுதும் இயங்குகிற இனத்தைச் சார்ந்தது.... சமுதாய உணர்வில் தொடர்ச்சியாக வளர்ந்து வரும் தன்மை வாய்ந்தது." பாரதியின் மேதைப் பார்வையில் சரித்திரக் கண்ணேட்டத்தின் தெளிவும் விழுந்திருந்ததால் அவனுல் உறுதியான நம்பிக்கையோடு, மேலும் மேலும் மென்மேலும் முன்னேக்கி, முன்னேக்கி, முன்னேக்கிப் பார்க்க முடிந்தது. சர்வ சந்தேக வாதக்கறை, அவனுடைய பாடல்களில் ஒரு எழுத்தைக் கூட அசுத்தப்படுத்தியதில்லை.

"நமக்குத் தொழில் கவிதை நாட்டுக் குழைத்தல் இமைப் பொழுதும் சோராதிருத்தல்" என்று தனக்குத் தொழில் "நாட்டுப் பணி" (மக்கள் பணி) என்று ஆணித்தரமாகக் கூறி, கவியரசின் தொழிலைப் பற்றி உலகறியப் பறை அறைகிருன் பாரதி. இவ்வாறு, கவிஞன், "மக்கள் தலைவன், மக்கள் தொண்டன்" என்ற நவயுக மகாகவியின் அறிவுரைக்கு, இலக்கணமாக வாழ்ந்தவன் பாரதி. இன்றையத் துருக்கிய பாரதியான நாஜிம் ஹிக்மத்தும்

"கோடானுகோடி மக்களின் போர் வீரன் நான்" என்றே பாடுகிருன்.

"மக்கள் வாழ்க்கையை விட்டு ஓடி ஒளியக் கூடாது; தங்கள் பலத்தையும் திறத்தையும் உணர வேண்டும்" என்றே பாரதி காலமெல்லாம் போதித்தான்.

"இன்று ஜன யுகத்தில் நாம் வாழ்கிறோம், நமக்கு மிக மிகத் தேவையான இலக்கியமும் கலையும், மக்கள் இலக்கியமாகவும் மக்கள் கலையாகவும்தான் இருக்க முடியும். அவைகள் மக்களின் நலன்களை எதிரொலிப்பவைகளாகவே இருக்க வேண்டும். அவைகள் ஜனநாயகத் தன்மை கொண்டவைகளாகவும், எதார்த்தமும் மனிதத்துவமும் உடையவைகளாகவும், தேசிய, அதே பொழுதில் சர்வ தேசீயத் தன்மையுடையவைகளாகவுமே இருக்கவேண்டும்" இவ்வாறு சீனத்தின் தலை சிறந்த கவிஞரும், எழுத்தாளரும் சீனக் குடியரசின் உதவித் தலைவர்களில் ஒருவருமான கோ-மோ-ஜோ கூறுகிருர்.

இந்தத் திசையில் பாரதி நமக்குத் தகுந்த முன்னோடி; சிறந்த வழிகாட்டி.

இந்த எண்ணங்களோடு பாரதி வாழ்க்கையையும் பாடல்களின் அறிமுகத்தையும், பாடல்களையும் படியுங்கள்.

## 2. வாழ்க்கை (11-12-1882---11-9-1921)

தமிழ் நாட்டுப் பெருங் கவிஞர்களுள் ஒருவர் சி.சுப்பிரமணிய பாரதி.

இவர் திருநெல்வேலி ஜில்லா, கோவில்பட்டி தாலுகா, எட்டையபுரத்தில் 1882-ம் ஆண்டு கார்த்திகை மாதம் மூல நாளில் (11-12-1882) பிறந்தார். இவருடைய தந்தை

யார் பெயர் சின்னசாமி ஐயர்; தாயார் பெயர் லட்சுமி அம்மாள்.

முன்காலத்தில் ஒவ்வொரு ஜமீனிலும் பல புலவர்கள் வாழ்ந்து, ஜமீன்தார்களைப் புகழ்ந்து பாடி வந்தார்கள். எட்டையபுரம் ஒரு பெரிய ஜமீன். அங்கும் பல புலவர்கள் இவ்வாறு வாழ்ந்து வந்தார்கள். பாரதியின் இளமைப் பருவம் இந்நகரிலுள்ள தமிழ்ப் புலவர்களிடையே கழிந்தது. இதனால் இவரிடையே தமிழ்ப் புலமை, மிகுந்த இளம் பருவத்திலேயே தோன்றலாயிற்று. தமது பதினோராவது வயது முதலே இவர் பாடல்கள் இயற்றத் தொடங்கினார்.

பள்ளிப் படிப்பில் பாரதி சிறப்படையவில்லை. பாரதியின் குழந்தைப் பருவத்திலேயே அவருடைய தாயார் இறந்து போனார். சின்னசாமி ஐயர் பையனுக்குத் திருக்குறள், கம்ப ராமாயணம் தாயுமான சுவாமி பாடல் முதலிய நூல்களைச் சொல்லி வந்தார். இந்நூல்களிலே பாரதிக்கு ஆழ்ந்த பற்று ஏற்பட்டிருந்தது. இவற்றைப் படிப்பதிலும், சுலபமாகக் கவி பாடுவதிலும் இவர் மனதை ஒருமுகப் படுத்தி வந்தார்.

பையனாக இருக்கையில் பாரதிக்கு எட்டையபுரம் அரண்மனையில் சலுகை அதிகம் உண்டு. 'சமஸ்தானம்' பாரதியை அன்புடன் ஆதரித்ததால், சமஸ்தான வித்வான்களும் மற்றவர்களும் பாரதியிடம் அன்பும் மரியாதையும் செலுத்திவந்தார்கள். எனவே இவருடைய கவித் திறத்தைக் கண்டு இந்த வித்வான்களே இவருக்குப் "பாரதி" என்ற பட்டம் சூட்டியதாகவும் தெரிகிறது.

படிப்பின் பொருட்டு பாரதி எட்டையபுரத்தை விட்டுத் திருநெல்வேலிக்குச் சென்று, அங்கு, இந்துக் கலாசாலையில் கற்கும்படி நேர்ந்தது. அப்பொழுது தமிழன்பர்கள் பலர் இவருக்குத் துணைவரானார்கள். இவருடைய கவித்வமும் தங்கு தடையின்றித் தானே சுரந்து பெருகி வந்தது.

இந்தக் கல்லூரியில் ஐந்தாவது படிவம் முடியும்வரை இவர் கல்வி பயின்ருர். பின்னர் தமது அத்தை வசித்து வந்த காசி நகருக்குச் சென்ருர். அங்கே இவர் பிரதேசப் பரீட்சையில் முதல் வகுப்பில் தேறிஞர். கல்லூரிப் படிப் புக்கு முதல் படியான எப். ஏ. வகுப்பிலும் சேர்ந்தார். குடும்பக் கவலையினுலோ, கல்லூரிப் படிப்பில் மனமில்லா மலோ, ஓராண்டுக்குள் அந்தப் படிப்புக்குக் கும்பிடு போட்டு விட்டு நின்று விட்டார். இந்தக் காலத்தில்தான் இவர் தமது வடமொழி அறிவையும் பெருக்கிக்கொண்டார் என்று தெரிகிறது.

1901-ல் எட்டையபுரம் ஜமீன்தார் பாரதியைக் காசியி லிருந்து வரவழைத்து ஜமீனில் ஓர் உத்யோகம் கொடுத் தார். இந்த உத்யோக காலத்திலும், கவி பாடுவதையே வாழ்க்கையின் முக்கிய நோக்கமாகக் கொண்டிருந்தார். அக்காலத்தில் பேர்போன அண்ணுமலை ரெட்டியார் காவடிச் சிந்துபோல பாரதியும் ஒரு காவடிச் சிந்து இயற்றிஞர்.

ஜமீன்தாரின் கண் மூடி ராஜ்யம் பாரதிக்குப் பிடிக்க வில்லை. தமிழ் மீதிருந்தபற்று, உத்யோகத்தை விட்டு விட்டு, 1902-ல் அவரை மதுரைக்குச் செல்லும்படி செய்தது. மதுரையில் தமது கவித் திறமையையும் கல்வித் திறமை யையும் பலரும் பாராட்டும்படி வாழ்ந்து வந்தார். இந்தச் சமயத்தில் சேதுபதி உயர் தரப் பள்ளிக்கூடத்தில் தமிழ்ப் பண்டிதர் வேலை ஒன்று காலியாயிற்று. அந்த வேலை பாரதிக்குக் கிடைத்தது.

சில காலம் அந்த வேலையைப் பார்த்து வந்தார். தமிழ் ஒளி சிறந்து விளங்கிய பாரதியின் கவி உள்ளத்திற்குப் பண்டைப் பழம் பாடல்களையே திரும்பத் திரும்ப அரைத்த மாவையே அரைப்பது போல் சொல்லிக் கொடுத்து நாள் கழிப்பது வெறுப்பாகத் தோன்றிற்று. 1904-ம் ஆண்டு ஆரம்பத்தில் சேதுபதி கலாசாலையை விட்டு “சுதேச

மித்திரன்" பத்திரிகைக்கு உதவி ஆசிரியராகச் சென்னைக்குச் சென்றார்.

அப்பொழுது நாடெங்கும் தேச பக்திக் கனல் ஜொலித்துக் கொண்டிருந்தது. பாரதியின் நெஞ்சம் இக் கனலில் உருகி மெழுகு மாதிரி ஆகி விட்டது. பாரதத் தாயை வணங்கி அழியாப் புகழ் மாலைகள் பலவற்றைப் பாடினார். தமிழ்நாட்டைப் பற்றியும் பல உணர்ச்சி ததும்பும் பாடல்கள் பாடினார். இந்தக் காலத்தில் எஸ் துரைசாமி ஐயர், சுரேந்திரநாத் ஆரியா, வி. சக்கரைச் செட்டியார், மண்டையம் எஸ். என். திருமலாச்சாரியார், டாக்டர் எம். ஸி. நஞ்சுண்டராவ்போன்றார், பாரதியின் உயிர்த் தோழர்களாக விளங்கினர்.

1905-ல் வங்கப் பிரிவினை நிகழ்ந்தது. அப்பொழுது வைஸ்ராயாக இருந்த கர்ஸன் பிரபு, மேற்கு வங்கம், கிழக்கு வங்கம் என்று வங்கத்தை இரு கூறுகளாகப் பிரித்தார். இந்தப் பிரிவினையை வங்காளிகள் ஆத்திரத்துடன் எதிர்த்தனர். இந்தக் கிளர்ச்சியினின்று வெடித்ததுதான் சுயராஜ்யக் கிளர்ச்சி.

வங்கப் பிரிவினை காலத்திற்குச் சிறிது முன்பும் அதை ஒட்டியும் பாரதியின் தேச பக்தி தீவிரமாகத் துடித்தெழுந்தது. 'சுதேசமித்திர'னின் மிதவாதக் கொள்கைக்குள் சிறைப்பட்டுக் கிடக்க பாரதியின் மனம் இசையவில்லை. எனவே 'மித்திரனை' விட்டு விலகிக் கொண்டார்.

1906-ல் "இந்தியா" என்ற தமிழ் வாரப்பத்திரிகையைப் பாரதி துவக்கினார். இதே ஆண்டில் நடந்த கல்கத்தா காங்கிரஸில் அதன் தலைவரான தாதாபாய் நவ்ரோஜி "சுயராஜ்யம்" என்ற மூல மந்திரத்தைத் துணிவுடன் ஜபித்தார். சுதேசி, அந்நிய நாட்டுச் சாமான் பகிஷ்காரம், நாட்டுக்கல்வி, சுயராஜ்யம்—இவைகளைப் பற்றிய ஆணித்தரமான தீர்மானங்கள் நிறைவேற்றப் பட்டன. கல்கத்தா

தீர்மானங்களை மாற்ற வேண்டுமென்று மிதவாதிகள் தலை கீழாக நின்றனர். இதற்குச் சர்க்கார் தூண்டுதலும் உண்டு. காங்கிரஸின் புதுக்கொள்கையைத் தாங்கி, பாரதி 'இந்தியா' பத்திரிகையில் அமர்க்களமாக எழுதி வந்தார், வாரா வாரம், புதுக் கட்சி உற்சாகமே நாடெங்கும் உற்சாகமாகத் திகழ்ந்தது.

இந்தச் சமயத்தில் விபின்சந்திர பாலர் சென்னைக்கு நல் வரவு தந்தார். சென்னையில் அவர் ஆற்றிய ஐந்து சொற் பொழிவுகள் தமிழர்களின் அரசியல் பொக்கிஷமாக அன்று கருதப்பட்டது. விபின் பாபுவின் சென்னை வரவுக்குக் காரணம், பாரதியும் அவரது நண்பர்களுமே. பழைய தலைவர்கள் வரவேற்க அஞ்சினர். பாரதியும் அவரது குழுவினரும் வரவேற்புக்கான சகல ஏற்பாடுகளும் செய்தனர்.

சென்னை நகரத்தின் அரசியலில் திடீர் மாறுதல் ஏற்பட்டது. சென்னை 'மகாஜன சபை'யின் அக்காலத்து அங்கத்தினர்கள் சர்க்கார் பக்தர்கள். உருப்படியான வேலை செய்ய அவர்களுக்குத் துணிச்சல் இல்லை. எனவே பாரதி, 'சென்னை ஜனசங்கம்' என்ற ஒன்றை நிறுவி வேலை செய் தார். அது தோன்றி அழியும் வரை, போலீஸாரின் கடைக் கண் பார்வை அதைவிட்டு அகலவே இல்லை

1907-ல் சூரத் காங்கிரஸ் நடந்தது. மிதவாதிகள் கோகலே தலைமையிலும் தீவிரவாதிகள் திலகர் தலைமை யிலும் அணிவகுத்து நின்றனர். தமிழர் தலைவர் வ.உ. சிதம்பரனாரும், தமிழ்க் கவியரசர் பாரதியாரும் இந்தக் காங் கிரஸுக்குத் தமிழகத்திலிருந்து பிரதிநிதிகளாகச் சென்ற தீவிரவாதிகள். சூரத்தில் திலகரின் தீர்மானத்திற்கு மன முவந்து ஆதரவு தந்த தீவிரவாதிகளில் பாரதியும் ஒருவர். ஒப்பற்ற கவிஞரான பாரதி, ரவீந்திரநாதரைப் போல் அரசியல் கிளர்ச்சிகளில் கலந்து கொள்ளாமல் ஒதுங்கி

நின்றிருக்கலாம். அவ்வாறு செய்யாமல், அவர் அரசியலில் கலந்து கொண்டதற்குத் திலகர், அரவிந்தர், விபின்பாபு கூட்டுறவே காரணம்.

பாரதி சூரத்திலிருந்து சென்னைக்குத் திரும்பியதும், திலகரின் கொள்கையையும் வழியையும் ஆதரித்து "இந்தியா" பத்திரிகையில் சண்டப் பிரசண்டமாக எழுதத் தொடங்கினர். 1908 ம் ஆண்டு திலகருக்கு ஆறு ஆண்டுக் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டது. திலகர் கோஷ்டியைச் சேர்ந்த "பெரிய மரங்களை" ஒவ்வொருவராய் அரசாங்கத்தார் சாய்க்கத் தொடங்கினர்.

"இந்தியா" பத்திரிகை நடத்திய காலத்தில்தான் பாரதியின் புகழ் தமிழ் நாட்டில் எங்கும் பரவலாயிற்று. இவருடைய எழுத்திலும் கவியிலும் செறிந்து கிடந்த வல்லமையை அப்பொழுதுதான் தமிழ் மக்கள் உணரத் தலைப்பட்டனர். திலகர் பெருமான் கைது செய்யப்பட்ட பின்னர், சென்னை சர்க்காரின் அசுரப் பார்வை "இந்தியா" பத்திரிகையின் மீது விழுந்தது.

1908-ல் பாரதி புதுச்சேரிக்குச் செல்லும்படி நேர்ந்தது. அங்கு வாழ்ந்த காலத்தில் பாரதி தமது கருத்துக்களை அச்சமின்றி வெளியிட்டு வந்தார். 1910-ல் புதுச்சேரிக்கு அரவிந்தகோஷ் வந்து சேர்ந்தார். அவரோடு பழகி தத்துவ ஞான ஆராய்ச்சியில் பாரதி ஈடுபட்டார். அரவிந்தர் புதுச்சேரிக்கு வந்த அதே ஆண்டில் பாரதி 'கர்மயோகி' என்ற பத்திரிகையை ஆரம்பித்தார். கொஞ்ச காலத்திற்குப்பின், இதுவும் நடக்க முடியாத நிலையை பிரெஞ்சு சர்க்கார் ஏற்படுத்தி விட்டது.

பாரதி புதுச்சேரி வாழ்வில் (அரசியல் கிளர்ச்சியில் தவிர) பூரணமாகக் கலந்து கொண்டு, பத்து வருடம் அங்கேயே வாழ்ந்தார்.

1914-ம் ஆண்டில் தொடங்கிய மகா யுத்தத்தின் மூல மாக இந்தியவுக்கும் பல நன்மைகள் ஏற்படலாமென்று பாரதியார் நம்பியிருந்தார். ஆனால் 19 8-ல் தாம் காணு வது வீண் கனவு என்பதை உணர்ந்தார். பிறகு புதுச்சேரி வாழ்க்கை அவருக்குப் பிடிக்கவில்லை. பிரிட்டிஷ் இந்தியா வுக்கு வந்துவிட வேண்டுமென முடிவு கட்டினார்.

பாரதி புதுச்சேரியை விட்டுப் புறப்பட்டுப் பிரெஞ்சு இந் திய எல்லையைத் தாண்டியதும் பிரிட்டிஷ் இந்தியப் போலீ ஸார் அவரைக் கைது செய்து கடலூர் சப்-ஜெயிலில் கொண்டு போய் வைத்தனர். பின்னர், விடுதலையாகித் தமது மனைவியின் ஊராகிய கீழ்க்கடையத்தில் சில காலம் வாசம் செய்தார். அப்பால் 1920-ல் சென்னைக்கு வந்து மீண்டும் 'சுதேசமித்திரன்' பத்திரிகையில் உதவி ஆசிரிய ராக அமர்ந்தார்.

பாரதி சென்னையில் திருவல்லிக்கேணியில் வாழ்ந்து வந்தார். பார்த்தசாரதி கோவில் யானையோடு அவருக்குப் பழக்கம் ஏற்பட்டது. தினசரி அதற்குத் தேங்காய், பழம் கொடுத்து வந்தார். ஒரு நாள் அந்த யானைக்கு மதம் பிடித்துவிட்டது. வழக்கம் போல் அன்றும் அன்போடு தேங்காய், பழம் கொடுக்க அருகில் சென்ற பாரதியை அந்த யானை துதிக்கையால் தள்ளிவிட்டது. பாரதி கீழே விழுந்தார். இவ்வதிர்ச்சியினின்றும் மீளாமல் 1921-ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 11-ம் நாள் இரவு சுமார் ஒன்றரை மணிக்குத் திருவல்லிக்கேணி துளசிங்கப் பெருமாள் கோவில் தெரு, 67-ம் இலக்கமுள்ள வீட்டில் காலம் ஆனார்.

## 3. பாடல்களின் அறிமுகம்

### தமிழும் தமிழகமும்:

பாரதி தமிழை நினைக்கிருன். தனது நெஞ்சில் ஊறி உறைந்து நிற்கும் தமிழை நினைக்கிருன். தனது உயிரும் உணர்வும் ஆழ அமிழ்ந்து கிடக்கும் தமிழை நினைக்கிருன். அதே பொழுதில், தான் செவ்வனே அனுபவித்தறிந்த ஆங்கிலம், ஆரியம், இந்தி, வங்கம், பிரெஞ்சு முதலிய மொழிகளையும் அவற்றின் மூலம் உலகமொழிகளையும் நினைக்கிருன். உடனே,

"யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோல்
இனிதாவ தெங்கும் காணேம்"

என்று ஒப்புநோக்கும் உணர்வுடன் தமிழமுதின் நிகரற்ற இனிமையைப் பெருமிதத்தோடு பாடுகிருன்.

அதே பொழுதில் இத்தகைய தமிழைத் தாய் மொழியாகக் கொண்ட கோடானு கோடித் தமிழர்களின் நிலையை நினைக்கிருன். 'உலகமெலாம் இகழ்ச்சி சொல்லப் பான்மை கெட்டு' நிற்கும் அவர்களுடைய அவல நிலைமை பாரதியின் நெஞ்சைத் தாக்கி, கண் கலங்க வைக்கிறது. "நாமமது தமிழரெனக் கொண்டிங்கு வாழ்ந்திடுதல் நன்ருே! சொல்லீர்!" என்று தமிழகம் கிடுகிடாய்க்க அறைகூவி, சாதாரணத் தமிழ்மக்களைத் தட்டி எழுப்புகிருன்.

"ஆங்கிலம் ஒன்றையே கற்ருர் - அதற்கு
ஆக்கையோடு ஆவியும் விற்ருர்
தாங்கருநம் அன்னியர் ஆஞர் – செல்வத்
தமிழின் தொடர்பு அற்றுப் போஞர்"

என்று வயிற்றெரிச்சலுடன் ஆற்ருமையால் ஒரு புலவர் பாடினரே, அத்தகைய ஆங்கிலத் - தமிழர்களை அடுத்தபடியாகப் பாரதி நினைக்கிருன். இவர்கள், தமிழில் 'ஷேக்ஸ்பியர்

உண்டா, 'மில்டன்' உண்டா' 'டென்னிஸன்' உண்டா, 'ஷெல்லி' உண்டா என்று புரியாத்தனமாக, ஆனல், புரிந்ததான எண்ணத்தோடு அடிக்கடி இளக்காரமாகக் கேட்கிருர்களே, அதையும் நினைக்கிருன். இவர்களுக்குப் பதில்- இதரர்களுக்கு உண்மை அறிவிப்பு செய்ய நினைக் கிருன். எனவே, உலக மகாகவிகளையெல்லாம் கவிதா மனோபாவத்தோடு நன்ருகக் கற்றறிந்து நிர்ணயித்திருந்த பாரதி,

> ''யாமறிந்த புலவரிலே கம்பனைப்போல்
> வள்ளுவர்போல், இளங்கோவைப்போல்
> பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை
> உண்மை, வெறும் புகழ்ச்சியில்லை''

என்று அறுதியிட்டு உறுதி கூறுகிருன்.

பின்வந்த ஆராய்ச்சி வல்ல பன்மொழிப் புலவர்களான தமிழ்ப் பேரறிஞர்கள் பாரதி கூறிய இந்த உண்மையை அட்டியில்லாமல் ஒப்புக்கொள்கிருர்கள். ஆரியப் பித்தமும் ஆங்கில மோகமும் பிடித்து அலைந்த தமிழர்களுக்கு, ''சேமமுற வேண்டுமெனில் தெருவெல்லாம் தமிழ் முழக்கம் செழிக்கச் செய்வீர்'' என்று பாரதி அறிவுறுத்துகிருன்.

அடுத்தபடியாக, ''அகழியில் விழுந்த முதலைக்கு அதுவே வைகுண்டம்'' என்பதுபோல், 'தாங்கள் கற்ற தமிழே எல்லாம்' என்ற பத்தாம் பசலி மனப்பான்மை யோடு, புதுமை கண்டு கசந்து முகஞ் சுளிக்கும் வைதிகத் தமிழ்ப் பண்டிதர்களைப் பாரதி நினைக்கிருன். ''எல்லாப் பொருளும் இதன்பால் உள'' என்ற வெண்பாப் பாட்டை இவர்கள் சங்கராபரணத்தில் ஆலாபனஞ் செய்து எக்களிப் படைவதற்கு அடிப்படையான கிணற்றுத் தவளை மரபை நினைக்கிருன்.

"மறைவாக நமக்குள்ளே பழங்கதை
சொல்வதிலோர் மகிமை இல்லை"

என்று எடுத்துக் கூறி மாறுதல் வேண்டா நம் பண்டிதர்களின் மனத் தடிப்பைச் சுக்கு நூருக உடைத்தெறிகிருன் பாரதி.

அதே மூச்சில்

"பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள்
தமிழ்மொழியில் பெயர்த்தல் வேண்டும்
இறவாத புகழுடைய புதுநூல்கள்
தமிழ் மொழியில் இயற்றல் வேண்டும்"

என்று தமிழ் வளர்ச்சித் திருப்பணியில் இறங்கும்படி ஆணையிடுகிருன். புதிய தமிழ்க் காதலர்களுக்கு, 'நாமே டமாரமடித்துக் கொள்வதனுல் நமது புலமைக்குப் பெருமை ஏற்படாது; வெளி நாட்டார் வணக்கம் செலுத்தும் பொழுதுதான் நமது புலமையின் திறமைக்குப் பெருமை ஏற்படும்" என்பதைத் தமிழன்பர்கள் மறந்துவிடக்கூடாதென்றும் புத்தி புகட்டுகிருன்.

அடுத்தபடியாக "கவிதை கவிதைக்காகவே", " கலை கலைக்காகவே" என்ற கவிஞரையும் கலைஞரையும் பாரதி நினைக்கிருன். அவர்களுக்கும் யதார்த்தச் சூழ்நிலைக்கும், அவர்களுக்கும் மக்களின் வாழ்க்கைப் போராட்டத்திற்கும், சுருங்கச் சொன்னுல் அவர்களுக்கும் உண்மைக்கும் ஒட்டும் உறவும் இல்லாதிருப்பதை நினைக்கிருன். உடனேயே அவர்களுக்கு,

"உள்ளத்தில் உண்மையொளி உண்டாயின்
வாக்கினிலே ஒளி உண்டாகும்"

என்ற உண்மையைப் போதிக்கிருன். பள்ளத்தில் வீழ்ந்து, பரிதாபகரமாகத் தவித்துத் தத்தளிக்கும் 'குருடர்கள்' (பாமர மக்கள்) உண்மையுணர்ந்து உயர்நிலை எய்தவேண்டு

மானால், வெள்ளத்தின் பெருக்கைப் போல், கலைப் பெருக்கும் கவிப்பெருக்கும் மேவ வேண்டும் என்று தமிழ் இலக்கியச் செழிப்பின் தேவையை வற்புறுத்துகிறான். இறுதியாக,

"தெள்ளுற்ற தமிழமுதின் சுவை கண்டார்
இங்கமரர் சிறப்புக்கண்டார்"

என்று மேற்கூறிய வகைதொகைகளிலெல்லாம் வளரும் தமிழை நுகரும் தமிழ் மக்கள் புதிய யுகத்தில் புதிய உலகத்தில் புதிய மனிதராய் மலர்ந்து புத்தின்பப் பெருவாழ்வு பெறுவர் என்று இமய முகட்டில் தூக்கிவைத்துத் தமிழுக்குப் பூசனை புரிகிறான் பாரதி.

மேற்கூறியவை 'தமிழ்' என்ற பாட்டில் பாரதி காட்டும் முதன்மையான கருத்துக்கள்.

'தமிழில் முடியுமா?' என்று நம்பிக்கை செத்துக் கேட்கும் பேராசிரியப் பெருமைக்காரர்களுக்கு,

"வானம் அளந்ததனைத்தும் அளந்திடும்
வண்மொழி வாழியவே
"வானம் அறிந்த தனைத்தும் அறிந்து
வளர்மொழி வாழியவே
"எங்கள் தமிழ் மொழி எங்கள் தமிழ் மொழி
என்றென்றும் வாழியவே"

என்று தமிழை வாழ்த்தி நம்பிக்கை ஊட்டுகிறான் பாரதி.

"சொல்லில் உயர்வு தமிழ்ச் சொல்லே" என்று பிறிதோரிடத்தில் பாடுவதும் இங்கு குறிப்பிடத்தக்கது. தமிழில், அதன் வலுவில், வளர்ச்சியில் பாரதிக்கிருந்த அசையாத உறுதி கங்குகரையற்றது. பாரதியால் தமிழ் மேன்மையுற்றது; தமிழால் பாரதி மேன்மையுற்றான் என்ற புரட்சிக் கவிஞர் பாரதி தாசன் கூற்று மெய், மெய், மெய்.

"புத்தம் புதிய கலைகள் - பஞ்ச
பூதச் செயல்களின் நுட்பங்கள் கூறும்

மெத்த வளருது மேற்கே - அந்த
மேன்மைக் கலைகள் தமிழினில் இல்லை
சொல்லவும் கூடுவதில்லை - அவை
சொல்லும் திறமை தமிழ்மொழிக் கில்லை''

என்ற கருத்து இன்றும் தமிழர்களான பல ஆங்கிலங் கற்ற அறிவாளிகளையும் கல்விமான்களையும் பிடித்தாட்டுகிறது. இந்த நூற்றாண்டின் ஆரம்பத்தில்—பாரதி காலத்தில்—மேற்படிக் கருத்து உரம் பெற்று நின்றதைப் பாரதி காண்கிறான். இதை உடைத்தெறிய வேண்டிய தனது கடமையை உணர்கிறான்.

தமிழ்த் தாயின் வாயில் வைத்துத் தமிழின் வரலாற்றைக் கூறுகிறான்:

''ஆதிசிவன் பெற்றுவிட்டான்''

அதாவது என்று பிறந்தேன் என்று உரைக்க முடியாத தொன்மையினள் நான். அகத்தியன் இலக்கணத்தாலும், மூவேந்தர் அன்பு வளர்ப்பாலும், ஆரியத்திற்கு நிகராகவாழ்ந்தேன். கள், தீ, காற்று, வெளி இவை கலந்து தெள்ளு தமிழ்ப் புலவர்கள் நல்ல 'தீஞ்சுவைக் காவியம்' செய்து கொடுத்தார்கள், பற்பல சாத்திரங்கள் படைத்தளித்தார்கள், உலகு புகழ வாழ்ந்தேன். அன்று என் காதில் விழுந்த திசை மொழிகள் பல. அவை இன்று இறந்தொழிந்தன.

''இந்தக் கணமட்டும் காலன்—என்னை
ஏறிட்டுப் பார்க்கவும் அஞ்சியிருந்தான்.''
''இன்றொரு சொல்லினைக் கேட்டேன்''

அது என்ன? ''புத்தம் புதிய கலைகள் தமிழினில் இல்லை. அவை சொல்லும் திறமை தமிழுக்கு இல்லை. மெல்லத் தமிழினிச் சாகும்'' - இதுதான் அந்த அவச்சொல்.

"சென்றிடுவீர் எட்டுத் திக்கும் - கலைச்
செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்கு சேர்ப்பீர்

"இந்தப் பெரும் பழி தீரும் – புகழ்
ஏறிப் புவிமிசை யென்றுமிருப்பேன்"

இதற்கு முன், பல காவியங்களையும், பல சாத்திரங்களையும், கால மாறுதலுக்கு ஏற்பப் புதுமை செய்து, தமிழ் அழியாது நின்று வந்திருக்கிறது. இன்றும் அறிஞர்களின் இடையருத முயற்சியால் எட்டுத் திசையும் சென்று, கலைச் செல்வங்கள் யாவையும் கொணர்ந்து தமிழ் புகழ் ஏறிப் புவிமீது வாழ முடியும். இவ்வாறு சரித்திர உண்மைகளை எடுத்துக்காட்டி, தமிழின் உயிராற்றலில் நம்பிக்கையை ஊட்டுகிறுன் பாரதி, உணர்ச்சிப் பெருக்கோடு.

பாரதிக்குப் பின் இன்றுவரை பல அறிஞர்களும் இளைஞர்களும் அந்த நன்னம்பிக்கையை நாள்தோறும் மெய்ப்பித்து வருகிறுர்கள்.

பாரதி, தனது தாயகத்தை - தமிழகத்தைப் பற்றிப் பாடுவதை அனுபவியுங்கள்! நாட்டன்பு நம்மிடம் மூண்டெழும்படி எவ்வாறு கிளறுகிறுன் என்ற விந்தையைப் பாருங்கள்!

"செந்தமிழ்நாடு!" என்றதும் அது சொற்டெருராகக் காதில் வந்து விழவில்லையாம். "இன்பத் தேனு"கக் காதில் வந்து பாய்கிறதாம். அந்த "இன்பத் தேனும்" வாயில் பாய்ந்து இனிமை யூட்டவில்லை. காதில் பாய்ந்து பரவசமூட்டுகிறது. தொடர்ந்து, இது - இந்தச் செந்தமிழ் நாடு - "எங்கள் தந்தையர் நாடு" என்று பேச ஆரம்பித்தால் போதுமாம், "மூச்சில் ஒரு சக்தி பிறக்கிறதாம்." ஏன்? "தந்தையர் நாடு" என்பது தமிழ் இலக்கியத்தில் ஒரு புதிய சொல்லாக்கம். அதோடு, பல்லாயிரம் ஆண்டையத் தமிழர் வாழ்வின் மாட்சியும் அதில் செறிந்து

கிடக்கிறது. பின் மூச்சில் சக்தி பிறக்காது என் செய்யும்? இனி ஒவ்வொரு தமிழனின் காதிலும் தேனையும் உணர்ச்சித் தீயையும் பாய்ச்சும், அட்சரம் லட்சம் பெறும் அந்த அடிகளைப் படியுங்கள்- பாடுங்கள் பார்க்கலாம்:

> ''செந்தமிழ் நாடெனும் போதினிலே-இன்பத்
> தேன்வந்து பாயுது காதினிலே—எங்கள்
> தந்தையர் நாடென்ற பேச்சினிலே-ஒரு
> சக்தி பிறக்குது மூச்சினிலே''

இது மாதிரி ஒரு அடி உலக இலக்கியத்தில் வேறெங்கேனும் காண முடியுமா? தேசபக்தியைக் கடல் மடை திறந்ததுபோல் ஓடவிட்டு எத்தனையோ நல்லிசைப் புலவர்கள் பாடியிருக்கிறார்கள்-பற்பல நாடுகளில், பலப்பல காலங்களில். ஆனால் மேற்கூறிய அடிகளில் பாரதி காட்டும் தேசபக்தியின் வேகமும் வன்மையும் போல் இனிப்பையும் நெருப்பையும் குழைத்து வேறெந்தக் கவிஞனேனும் பாடியதுண்டா?

இவ்வாறு சராசரித் தமிழனுக்கு உணர்ச்சியில் தேனைப் பாய்ச்சி, உயிரில் சக்தியைப் பாய்ச்சி, புதுத் தமிழனாக்கி நிறுத்தி, செந்தமிழ் நாட்டின் சிறப்பியல்புகளை சாதனைகளை ஓவியம்போல் காட்டுகிறான் பாரதி.

தமிழகத்தின் ஆண்-பெண்ணின் மேம்பாட்டை, ஆறுகளின் வளமையால் நாடு 'மேனி செழிக்கும்' அற்புதத்தை, மலை வளம், கடல் வளத்தை, அமர சித்திரமாக வரைந்து காட்டுகிறான்.

'செல்வம் எத்தனையுண்டு புவிமீதே -அவை யாவும் படைத்த தமிழ்நாடு'' என்று பாடி, தனது தீர்க்க தரிசனக் காட்சியைப் படம் பிடித்துக் காட்டி, நம்மை மெய் சிலிர்க்க வைக்கிறான். தமிழகத்தின் நேர்நிகரற்ற புலவர்பெருமான்களை, தமிழ்ப் பேரரசுகளை, தமிழ் மன்னர்களின் இணையற்ற





விறல் வீரத்தை, தமிழர் நாகரீகப் பெருமையை, பண்பாட்டுத் திறத்தை, உலக இலக்கியம் உள்ளளவும் நிலைத்து நிற்கும் விதத்தில் பாடி, நாட்டைப் பற்றியும் நம்மைப் பற்றியும் நமக்குப் புத்துயிரும் புத்துணர்வும் ஏற்படும் வண்ணம் நமது இதய வீணையின் ஒவ்வொரு நரம்பையும் மீட்டுகிறான் பாரதி.

பாரத நாடு

"சூரியன் உதித்தவுடனே சேதனப் பிரகிருதிமட்டுமேயன்றி அசேதனப் பிரகிருதியும், புதிய ஜீவனையும் உற்சாகத்தையும் பெற்றுத் திகழ்கின்றது. இதைப் போலவே, ஓர் புதிய ஆதர்சம் - ஓா கிளர்ச்சி - ஓர் தர்மம் - ஓர் மார்க்கம் - தோன்றுமேயானால் மேன் மக்களின் நெஞ்சம் அனைத்தும், இரவியை நோக்கித் திரும்பும் சூரியகாந்த மலர் போல், அவ்வாதர்சத்தை நோக்கித் திரும்புகின்றன. சென்ற சுபகிருது வருஷத்திலே பாரத நாட்டில், சர்வ சுபங்களுக்கும் மூலாதாரமாகிய 'தேசபக்தி" என்ற நவீன மார்க்கம் தோன்றியது. நல்லோர்களின் சிந்தையெல்லாம் உடனே புளகிதமாயின. யானும் அப் புதிய சுடரிடத்து அன்பு பூண்டேன். அவ் வன்பு காரணமாகச் சென்ற வருடம் சில கவிதை மலர் புனைந்து மாதாவின் திருவடிக்குப் புனைந்தேன்.

இவ்வாறு 1909-ல் வெளியான "ஜன்மபூமி" (ஸ்வதேச கீதங்கள் - இரண்டாம் பாகம்) என்ற தனது பாடல் தொகுதிக்குத் தானே எழுதிய முன்னுரையில் பாரதி குறிப்பிடுகிறார்.

'தேசபக்தி' என்ற நவீன மார்க்கச் சுடரிடம் அன்பு பூண்டு, புனைந்த பாடல்கள்தான் 'பாரத நாடு' என்ற இந்தத் தலைப்பின்கீழ்க் காணப்படும் பாடல்கள்.

பெற்றதாயும் பிறந்த பொன்னாடும்
நற்றவ வானினும் நனி சிறந்தனவே"

என்ற கொள்கையைத் தாரக மந்திரமாகக் கொண்டவன்

பாரதி. எனவே அவன், வேறு எந்தக் கடவுளையும் வணங்கவில்லை.

> ''வந்தே மாதரம் என்போம் - எங்கள்
> மாநிலத் தாயை வணங்குதும் என்போம்''!

என்று பாடி, மாநிலத் தாயைத்தான் முதல் கடவுளாக வணங்கினான் பாரதி. இலக்கியம் முழுவதையும் துருவி ஆராய்ந்தால் ஓர் உண்மையைத் தெள்ளத்தெளிவாகக் காண முடியும். அதாவது பாரதி, சிவலோகத்தையோ, வைகுண்டத்தையோ அல்லது செத்த பிறகு கிடைக்கக்கூடும் என்று சொல்லப்படுகிற எந்த நாட்டையும் பதவியையும் நம்பவில்லை. இந்த வாழ்வை, இந்த மண்ணை, இங்குள்ள மக்களைப் பாரதி நம்பினான்.

ஆகவே முழு மூச்சோடு - தாமரை இலைத் தண்ணீர்க் கொள்கைக்கு நேர்மாறாக-தனது நாட்டிடம் பாரதி அன்பு பூண்டான். பாரத நாட்டைத் திரிகரண சுத்தியோடு மனம் நிறைய நேசித்தான்.

''ஜாதி மதங்களைப் பாரோம்'', ''வேதியரும் ஈனச் சாதியரும்'', ''ஓர் தாயின் வயிற்றிலே பிறந்தோர்'' என்று முழங்கினான். 'வாழ்வும்' 'வீழ்வும்' 'முப்பது கோடி முழுமைக்கும்' பொது என்று கர்ஜித்தான். 'புல்லடிமையும்' 'தொல்லை இகழ்ச்சியும்' தீர,

> ''ஒன்றுபட்டா லுண்டு வாழ்வே - நம்மில்
> ஒற்றுமை நீங்கில் அனைவர்க்கும் தாழ்வே
> நன்றிது தேர்ந்திடல் வேண்டும் - இந்த
> ஞானம் வந்தால் பின் நமக் கெதுவேண்டும்''

என்று இந்நாட்டாரும், எந்நாட்டாரும் உலகில் இன்றும், என்றும் கடைப்பிடிக்கத் தகுந்த-கடைப்பிடிக்க வேண்டிய - மனிதமந்திரத்தை எடுத்தோதினான்.

நாட்டு வணக்கம் என்ற பாட்டில் பாரதி, பெற்றோர் உற்றாரோடு, குழந்தை குட்டிகளோடு இழைந்து குழைந்து வாழ்வதற்கு இந்நாடே ஆதார பீடம் என்பதை இதயத்தைப் பிழிந்து பாடுகிறான். இந்த அருமருந்தன்ன பாட்டு, மனித உணர்ச்சியுள்ள வரையில், அதிலும் வாழும் உணர்ச்சி உள்ளவரையில், அதிலும் ஆசாபாசத்தோடு வாழும் உணர்ச்சி உள்ளவரையில் சாகா வரம் பெற்று நிற்கும். யுகம் யுகாந்திரமட்டும், இந்தப் பாடலைப் பாடும் ஆண்-பெண் யாராயினும் உணர்ச்சி வசப்பட்டு நாட்டின் பால் "காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்"காதிரார் என்பது திண்ணம்.

"பாரத நாடு" என்ற பாட்டு, "பாருக்குள்ளே நல்ல நாடு-எங்கள் பாரத நாடு" என்ற பல்லவியில் ஆரம்பித்து, பாரத நாட்டின் சகல சம்பத்துக்களையும் அதி அற்புதமாக வர்ணித்துக் காட்டுகிறது.

"எங்கள் நாடு" என்ற பாட்டும் அவ்வாறே.

மன்னும் இமயமலையும்
இன்னறு நீர்க்கங்கையும்
பன்னரும் உபநிட நூல்களும்
மாராத வீரர்களும்
நாரத கானமும்
பூரண ஞானமும்
புத்தர் பிரானருளும்
பெற்றநாடு எங்கள் நாடு,

ஆகவே,

"பாரத நாடு பழம்பெரு நாடே
பாடுவம் இஃதை எமக்கில்லையீடே"

என்று மனமுருக நாட்டைப் பற்றிப் பாடுவதோடு மட்டும் நிற்கவில்லை பாரதி. நாட்டுக்குரிய நமது கடமையையும் வலியுறுத்துகிறான். அந்தக் கடமை என்ன?

''இன்னல் வந்துற்றிடும் போததற் கஞ்சோம்
ஏழையராகி இனிமண்ணில் துஞ்சோம்
தன்னலம் பேணி இழிதொழில் புரியோம்
தாய்திரு நாடெனில் இனிக்கையை விரியோம்,''

கொத்தடிமைப் பட்டு சத்தற்ற வாழ்வில் நெளியும் மோழைகளுக்கும் கோழைகளுக்கும் மேற்கூறியவாறு பக்குவமாக நாட்டுக் கடமையை உணர்த்துகிறான் பாரதி.

ஜயபாரத' என்ற பாட்டில் பாரத நாட்டின் பழம் பெருமைகளைச் சாங்கோபாங்கமாக எடுத்துக் கூறி, தாய் நாட்டை வாழ்த்துகிறான். இறுதியாக,

''சுதந்திரத்தி லாசையின்று
தோற்றி னுள்மன் வாழ்கவே''

என்று நாட்டுத் தாய்க்கு நயம்படப் பல்லாண்டு பாடுகிறான்.

''பாரதமாதா''-என்ற பாட்டில் சரித்திர, இதிகாச, புராண காவிய நாயகர்களின் கொள்கை, செய்கைகளை, பாரதமாதாவின் குணச்சித்திரங்களாக, எழில்நடப்புகளாக ஓவியம் தீட்டுகிறான் பாரதி.

திருவாசகப் பள்ளியெழுச்சி, திவ்யப் பிரபந்தப் பள்ளியெழுச்சி கேட்ட நாட்டில், பாரதமாதா பள்ளியெழுச்சியும் கேட்க அருளினான் கவி வள்ளல் பாரதி.

தேசீயக் கொடி

தாயின் மணிக் கொடியைப் போற்றாத நாடோ, ஏற்றாத காலமோ உலக வரலாற்றில் இல்லை. ஒவ்வொரு நாடும் தேசீயக் கொடியின் பெருமையைக் காக்க செங்குருதி பாய்ச்சி இருக்கிறது; மணிக்கொடியை வானுற உயர்த்திப் பிடிப்பதில் இன்னுயிரைத் தத்தம் செய்திருக்கிறது. இந்தக் குடியாட்சி யுகத்தில், பொதுமக்கள் தங்கள் புனிதக்

கொடியை மாசு படாது காக்க, சரித்திர ஏடுகளில் பொன்னெழுத்தில் பொறிக்கத் தக்கவாறு அபூர்வ வீரங்காட்டி அரும்பெரும் தியாகம் செய்திருக்கிறார்கள்.

ஆனால் பாரதி, பாரத நாட்டுக் கொடியினைப் பற்றியும், அதனைக் காக்கும் வெற்றி வீரர்களின் வீரதீரத்தைப் பற்றியும் பாடியிருப்பது தீர்க்கதரிசனத்தின் உச்சாணி நிலையை எட்டிப் பிடிக்கிறது.

பாரதி கொடிப் பாட்டுப் பாடிய பின், இன்றுவரையில் நமது நாட்டில் சில உக்ரமான கொடிப் போராட்டங்களும் நடந்திருக்கின்றன; கொடியின் பெருமையைக் காக்கும் பொருட்டு மயிர்க் கூச்செறிய வைக்கும் பல அபூர்வ நிகழ்ச்சிகளும் நடந்திருக்கின்றன. எல்லாம், கொடிப் பாட்டின் தீர்க்க தரிசனத்துக்குத் தக்க சான்றுகளாய் விளங்குகின்றன.

எடுத்த எடுப்பில்,

''தாயின் மணிக்கொடி பாரீர் – அதைத்
தாழ்ந்து பணிந்து புகழ்ந்திடவாரீர்''

என்று அந்தம் சிந்த அழகு ஒழுக எல்லோரையும் அன்புடன் அழைக்கிறான். பின்னர் கொடியை வர்ணித்துக் காட்டுகிறான். அப்பால் கொடியைக் காக்க அணி வகுத்து நிற்கும் தேசிய வீரர்களைக் காட்டுகிறான்.

''கம்பத்தின் கீழ்நிற்றல் காணீர் எங்கும்
காணரும் வீரர் பெருந் திருக்கூட்டம்
நம்பற்குரியர் அவ்வீரர் - தங்கள்
நல்லுயிரீந்தும் கொடியினைக் காப்பர்''

என்று நமக்கு அவர்களை அறிமுகப் படுத்துகிறான். அவர்கள் நம்பத் தகுந்த வீரர்களாம்; நல்லுயிரைப் பணயம் வைத்தும் கொடியினைக் காப்பார்களாம். மேலும், அணி

யணியாய் அவர்கள் நிற்பதையும், அவர்களுடைய அகல் மார்பையும் வடிவழகையும் காட்டுகிறான்.

பின்னர், "செந்தமிழ் நாட்டுப் பொருநரை", "சேரன் றன் வீரரை", "சிந்தை துணிந்த தெலுங்கரை", "கன்னடரை", "காலனும் அஞ்சக் கலக்கும் மராட்டரை", "இந்துஸ்தானத்து மல்லரை", "மறைவரும் கீர்த்திகொள் ரஜபுத்ர வீரரை", "பஞ்சநதத்துப் பிறந்தோரை", "தாயின் தொண்டு நினைந்திடும் வங்கத்தினோரை" நமக்கு அந்த அணிகளில் பாரதி அடையாளம் காட்டுகிறான். எல்லாத் தேசீய இனத்தாரையும் ஏற்றத் தாழ்வின்றி தக்க வரிசையோடு அறிமுகப்படுத்தி வைக்கிறான். இறுதியாக அவர்கள் பாரத நாட்டுக் கொடியைக் காப்பதில் காட்டும் ஒற்றுமை உணர்ச்சியை உச்சிமேல் வைத்து மெச்சி,

"சேர்ந்ததைக் காப்பது காணீர்- அவர்<br>சிந்தையின் வீரம் நிரந்தரம் வாழ்க!"

என்று ஆனந்தக் களிப்பில் இன்பக் கூத்தாடுகிறான்.

அவன் அன்று வாழ்த்திய அந்தச் "சிந்தையின் வீரம்" இன்றும் வாடா விளக்காய்ச் சுடர் விட்டு ஒளிர்கிறது. என்றும் ஒளிரும் என்பதில் ஐயமில்லை.

மொழி வேறு, இனம் வேறு படைத்த பல்வேறு மக்கள் ஒரு மனிதன் போல் ஒன்றிய, ஊன்றிய உணர்ச்சியுடன் நின்று பாரத நாட்டின் மணிக்கொடியை-இந்திய யூனியன் கொடியைக் காப்பர் என்ற பாரதியின் தீர்க்க தரிசனம், பல்வேறு தேசீய இனங்கள் திட்டவட்டமாக உருவாகிவிட்ட இன்று கோவா மண்ணில் உலகு மெச்ச நிதரிசனமாகிறது, பாருங்கள்!

### பாரத சமுதாயம்

தமிழகச் சான்றோர்கள், பாரத நாட்டு முனிவர்கள், மேலை நாட்டு நவீன அரசியல், சமுதாயப் புலவர்கள் இவர்

களின் சமுதாயக் கண்ணோட்டம் என்ன என்பதைப் பாரதி நன்கறிந்தவன். நம் நாட்டுப் பண்புக்குப் பங்கம் வராமல் புத்தம் புதிய கருத்துக்களின் தேவையையும் அவசியத்தை யும் புறக்கணிக்காமல், இன்றைய நமது சமுதாயத்தின் பிரத்யட்ச சூழ்நிலையைத் தெளிவாகக் கணக்கிலெடுத்து, உலகில், பாரத நாட்டில் நமது சமுதாயம் எப்படி யிருக்க வேண்டும் என்று வரையறுத்துக் காட்டிய, தமிழகத்தின் (பாரத நாட்டுக்கும் பொருந்தும்) தலை சிறந்த தீர்க்கதரிசி பாரதி.

"பாரத மக்களின் தற்கால நிலைமை" என்ற பாட்டில், ஏது காலத்துப் பாரத சமுதாயத்தின் அதள பாதாள நிலைமையைக் கல்லும் கனிந்துருக, வெகு உருக்கமாகப் பாடி யிருக்கிறான் பாரதி. தமிழகத்தைப் பகைப் புலனாகக் கொண்டு, இந்தத் துணைக் கண்டத்தில் வாழும் மானிடப் பரப்பின் தொடை நடுங்கும் அச்சத்தை, புழுத்து நாறும் மூட நம்பிக்கையை பயங்கரமான பாமரத் தன்மையை, நவக் கிரகக் குணதிசயத்தை அவிழ்த்து விட்ட நெல்லிக்காய் மூட்டைத்தனத்தை, புல்லிய வம்புதும்பு வல்லடி வழக்கு களை, விழிகண் குருட்டுத்தனத்தை, ஏமாந்த சோணகிரித் தனத்தை, 'பொறியற்ற விலங்குகள் போலும்' வாழ்க் கையை, நாம் நினைந்து நினைந்து, மனம் கரைந்து கரைந்து, கண்ணீரும் கம்பலையுமாய்த் தேம்பித் தேம்பி அழத்தக்க விதத்தில் பாடியுள்ளான் கருணையங்கடல் பாரதி.

> "பழையன கழிதலும் புதியன புகுதலும்
> வழுவல கால வகையினானே"

இந்த இலக்கணச் சூத்திரத்தை உறுதியாகக் கடைப் பிடித்தவன் பாரதி. "போகின்ற பாரதத்தில்" இன்னின்ன பண்புகள் வேரோடும் வேரடி மண்ணோடும் ஒழியவேண்டும் என்கிறான். "நிகழ்கின்ற பாரதத்தில்" இன்னின்ன பண்புகள் நம்மிடம் மலர்ந்து மணம் வீச வேண்டும் என்

கிறுன். இதைப் புதிய சமுதாயத் தெளிவோடு உறுதியாகக் கூறுகிறுன்.

பாரத சமுதாயப் பாட்டு -பாரதி பாடிய இறுதிப் பாட்டு. பாரதியின் முதிர்ந்த அரசியல், சமுதாயத் தத்துவ ஞானச் சாரம் நிறைந்த பாட்டு. இங்குதான், பாரத சமுதாயத்தை-பொதுஉடைமை சமுதாயமாக-உலகுக்கொரு புதிய சமுதாயமாக-தனது லட்சிய சமுதாயமாகக் காண்கிறுன். இந்தச் சமுதாயத்தில்தான் எல்லோரும் ஓர் குலம், எல்லோரும் ஓர் இனம், எல்லோரும் ஓர் நிறை, எல்லோரும் ஓர் விலை-ஆன சமுதாயத்தை மக்களே-உண்மையில்-மன்னரான சமுதாயத்தைக் காண்கிறுன். மனிதன் மனிதனுன சமுதாயத்தை, மனிதன் அமரநிலை எய்திய சமுதாயத்தைக் காண்கிறுன்.

### சுதந்திரமும் விடுதலையும்:

ஆங்கில நல்லிசைப் புலவர்களான பைரன், ஷெல்லி முதலிய புலவர்களும் பாரதநாட்டின் மகாகவிகளுள் ஒருவரான குருதேவ் இரவீந்திரநாத தாகூரும் எத்தனையோ அற்புத அற்புதமான சுதந்திரப் பாடல்கள் பாடியிருக்கிறுர்கள். இன்னும் உலக இலக்கியத்தில் எத்தனையோ கவியரசர்கள் சுதந்திரதேவிக்கு நறுமணம் வீசும் கவி மலர்கள் பல சூட்டியிருக்கிறுர்கள். ஆயினும் எங்கள் பாரதியைப் போல், சுதந்திரத்தைப் பற்றி, அதன் எல்லா அம்சங்களையும்பற்றி, இத்தனை ஆணித்தரமாகப் பாடிய புலவன் வேறு யாருமில்லை என்று துணிந்து கூறுவேன். பற்பல நாட்டு இலக்கியங்களும் தமிழில் வெளிவர, வெளிவர, தமிழர்கள் மென்மேலும் பன்மொழிகளைப் பயிலப் பயில, சர்வதேச கலாச்சார உறவில் நெருங்கிய உறவு அதிகரிக்க, அதிகரிக்க, எனது மதிப்பீடு சராசரித் தமிழன் அறியும் நாள் வருமென்று நம்புகிறேன்.

விடுதலை மகா கவியான பாரதியின் காட்சியில் பட்ட சுதந்திரம் மிகப்பெரியது. அது 'ஆரமுது''; புளித்த கள்ளல்ல. அது 'விண்ணில் இரவி''; மின்மினி அல்ல. ''கண்ணிலும் இனியது அந்தச் சுதந்திரம்''. பாரதி கருத்தில் இந்தச் சுதந்திரம் ''கண்ணீரும் செந்நீரும்'' வார்த்து வளர்க்கப்பட்டது, படுவதேயன்றி, ''தண்ணீர்விட்டு'' வளர்க்கப்படுவதல்ல. ஆகவே, இதை வீர சுதந்திரம் என்று வீறுகொண்டு பாடுகிறுன்.

''மானிடராதல் அரிது'' ''பிறந்தவர் யாவரும் இறப்பர்.'' இந்த உறுதி கொண்டவர்களுக்குக் ''கண்ணினும் இனியது சுதந்திரம்.'' இந்த உண்மைகளை ஆணி அடிப்பது போன்று நிலைநிறுத்திக்கொண்டு,

> ''மண்ணி லின்பங்களை விரும்பி சுதந்திரத்தின்
> மாண்பினை இழப்பாரோ?
> கண்ணிரண்டும் விற்றுச் சித்திரம் வாங்கினுல்
> கைகொட்டிச் சிரியாரோ?''

என்று நம்மை உறுத்து நோக்கி, கனீர்க் குரலில் கேட்கிறுன். சுதந்திரத்தைக், கத்தரிக்காய், வாழைக்காய் மாதிரி விற்பது அடி மடத்தனம் என்று இடித்துச் சொல்கிறுன் நமக்கு.

பாரதி 'சுதந்திர தேவிக்கு வணக்கம்' செலுத்தும் பாணி, ஈடும் எடுப்புமற்ற தனிப் பாணி. கோடானுகோடி விறல் வீரர்களைப் பாதகாணிக்கை செலுத்தி,

''சுதந்திரதேவி! நின்னைத்தொழுதிடல்மறக்கிலேனே''

என்று மெய்மறந்து வணங்குகிறுன்.

சுதந்திரம் இல்லாதவன் ''அணிகள்வேய் பிணம்'' (அலங்காரப் பிரேதம்)என்ற பாரதி கூற்றைவிட அடிமைத்

தனத்தை இகழவும் முடியாது, சுதந்திரத்தைப் புகழவும் முடியாது.

சுதந்திரம் இல்லாத நாட்டில்,

"ஆவியங்குண்டோ? செம்மை

அறிவுண்டோ? ஆக்கமுண்டோ?"

என்று உலகு அதிர வினவுகிறான். அடிமை நாட்டில் காவிய நூல்களும் ஞானக் கலைகளும் விளையாது என்கிறான். விடுதலை விழையாத, சுதந்திரத்தைப் பரிபாலிக்காத மக்களைப் "பாவிகள்" என்று சபிக்கிறான்.

சுதந்திரம், ஜனநாயகம் என்னும் "பேரறத்தினைப் பேணும் நல்வேலி" என்றும், "சேராவாழ்க்கை, துயர் மிடி" ஆகிய காரிருட் படலங்களைக் கிழித்தெறியும் "சோதி" என்றும், "வீரருக்கு அமுது" என்றும் அமுதத் தமிழில் போற்றிப் புகழ்கிறான்.

"வீர சுதந்திரம்", "சுதந்திர தேவியின் வணக்கம்' ஆகிய பாடல்கள், உலக சுதந்திர இலக்கியத்தில் மட்டு மல்ல, உயர்தரத் தமிழ் இலக்கியத்திலும் தெவிட்டாத ஆரமுதத் துண்டுகள்.

"சுதந்திரப் பள்ளு" என்ற பாட்டு, 'பாரதி மக்கள் கவி' என்ற மதிப்பீட்டுக்கு, மணி மகுடம் சூட்டுகிறது. சுதந்திரம் "பால் பிடிக்கும்" காலத்திலேயே, "ஆனந்த சுதந்திரம் அடைந்துவிட்டோ"மென்று அறுவடை விழாக் கொண்டாடுகிறானே, எதிர்காலத்தில் ஊடுருவிச் செல்லும் அவனுடைய "நுண்மாண் நுழைபுலம்" என்னே!

ஜாதீய சமுதாயம் தகர்ந்து தரையோடு தரையாகித் தேய்ந்து போனதையும், ஏகாதிபத்யத்தின் ஏகபோக மிராசும் ஆதிக்கமும் ஆதீனமும், பொடிசூர்ணமாகி ஆடிக் காற்றில் பறந்து போனதையும் பாரதி தொலைநோக்கிப்

பார்க்கிருன். வர்க்கப் போராட்டத்தில் உழவனும் தொழி லாளியும் வரிசை மேல் வரிசை பெறுவதையும், சோம்பேறிக் குத் தண்டனை, உழைப்பாளிக்கு ஓட்டுரிமை கிடைப்பதை யும் பாரதி பார்க்கிருன்.

> ''நாமிருக்கும் நாடு நமதென்பதறிந்தோம்-இது
> நமக்கே உரிமையாம் என்ப தறிந்தோம்''

என்ற மக்கள் ஜனநாயகம் தழைப்பதையும் பாரதி பார்க் கிருன். சுதந்திரத்தின் சரியான திசையைச் செம்மையாகப் பார்க்கிருன்.

தீர்க்கதரிசனத்தாலும் உணர்ச்சி வேகத்தாலும் எதிர் காலத்தை இறந்த காலமாக்கி, கோடானு கோடி உழவர் களாக நின்று ஆனந்த சுதந்திரப்பள்ளுப் பாடுகிருன்.

''விடுதலை''ப் பாட்டில், ''பறையருக்கும் இங்கு தீயர் புலையருக்கும் விடுதலை''; ஏழைக்கும் அடிமைக்கும் மாதர்க் கும் விடுதலை. ''இழிவுகொண்ட மனிதர் என்பர் இந்தியாவில் இல்லை.'' ''ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமானமாக் வாழ்வம் இந்த நாட்டிலே.''

இத்தகைய பொன்மொழிகளை, இந்த ஜனநாயக சகாப்தத்தில் இந்த நூற்றுண்டில் ஒரு பேராற்றல் பெரும் புலவன், எளிமையாக இனிமையாகத் தமிழில் பாடினுனே, அது தமிழும் தமிழ் மக்களும் செய்த தவப்பயன்தான். உலகில் எந்த மொழிக்கும் இந்தப் பேறு கிட்டவில்லை!

தேசீய இயக்கம் :

வெள்ளைக்கார விஞ்சுவுக்கும் தேச பக்தர் சிதம்பரம் பிள்ளைக்கும் நடந்த, பாரதி கவி பாடிக் காட்டுகிற, அந்தச் சரித்திர முக்கியத்துவ முத்திரை பெற்ற உரையாட்டம், அவியையும் ஆடவரில் அடலேருக்கும் வல்லமை வாய்ந் தது.

"பொழுதெல்லாம் எங்கள் செல்வம் கொள்ளை கொண்டு
போகவோ—நாங்கள் சாகவோ
அழுதுகொண்டிருப் போமோ ஆண்பிள்ளைகள்
அல்லமோ-உயிர் வெல்லமோ"

இவ்வாறு ஏகாதுபத்திய வெள்ளையனை நோக்கி வெடித்த தேச பக்தத் தீவிரவாதத் தலைவர் சிதம்பரனாரின் சொல்லாவேசம் தேசபக்த ஆசுகவி பாரதியின் கவிதாவேகமாக இடி முழக்கம் செய்யும் பொழுது, கிடைப் பிணங்களன்றி நடைப்பிணங்கள் என்று கிடந்தவர், 'உயிர் வெல்லமல்ல. நாங்கள் ஆண் சிங்கங்களே' என்ற வீரம் செறிந்த பதில் கொடுப்பர் என்பதுஉறுதி.

ஏகாதிபத்தியங்களின் காலடிகளில் மிதியுண்டு,அடிபட்ட புலி போல், சீறி எழுந்த ஆசியாவின் குரல், அந்நிய பிரிட்டிஷ் கொடுங்கோலர் தம் இரும்பு ஜோட்டின் கீழ் நூற்றைம்பது ஆண்டுகளாகத் "தாழ்வுற்று வறுமை மிஞ்சி விடுதலை தவறிக் கெட்டுப் பாழ்பட்டு, நின்ற" மானக்கேட்டின் எதிரொலியாக எதிர்ப்பொலியாக மதர்ந்து, கிளர்ந்து வெகுண்டெழுந்த இந்திய வெஞ்சினத்தின் குரல், மேற்படி உரையாட்டத்தில் பாத்திரம் வகிக்கும் தேசபக்தியின் பதிலில் காணும் ஒவ்வொரு எழுத்திலும் ஒலியும் எதிரொலியும் செய்கிறது.

பாரதியின் "பாரத தேவியின் அடிமை", சாதாரண நினைப்பில் நிழலாடும் அடிமைச் சகதியில் நெளியும ஈனப் புழுவல்ல. "பாரத தேவியின் அடிமை" சர்வசங்கபரித்தியாக உணர்வோடு தன்னை மறந்து நாட்டுப் பணியில் ஈடுபடுகிறவன் என்பதையும் நாட்டன்பையும் விடுதலை ஆர்வத்தையும் தங்களுடைய கண்ணீரையும் செந்நீரையும் வியர்வை நீரையும் கலந்து பாய்ச்சி, வாடாது வளர்க்கும் ஒப்பற்ற தலைவர்களிடம் தன்னிச்சையாகச் சுரந்தெழும்

பக்திப் பெருக்கால், அவர்களுக்குத் தொண்டாற்றும் அன்புத் தொண்டன் என்பதையும் பாரதி அந்தப் பாடலில் வெளிப்படுத்துகிறான்.

"லஜபதிராய் பிரலாபத்தில்" தேச பக்தி மனித இதயத்தில் உயர் தரமாக எப்படியெப்படி எதிரொலிக்கும் என்பதைப், பாரதி கைதேர்ந்த விதத்தில் காட்டுகிறான்,

"தொண்டுபட்டு வாழும் என்றன்
தூயபெரு நாட்டில்
கொண்டுவிட்டங்கு என்னை உடன்
கொன்றாலும் இன்புறுவேன்"

நாட்டின்பாலும், நாட்டு விடுதலையின்பாலும் ஒரு மனிதனுக்குள்ள பக்தியின் ஆழமும் வேகமும் இந்த அடிகளில் எவரஸ்டு சிகரமாக நின்று காட்சி யளிப்பதைவிட, வேறெந்த உச்சாணிப் படியில் நின்று காட்சி அளிக்க முடியும்?

பாரதி உண்மையின் வடிவம். தனி மனித வாழ்வாயினும் சரி, சமுதாய வாழ்வாயினும் சரி, உண்மை, நேர்மை ஆகிய தண்டவாளங்களில்தான் ஓட வேண்டும். அப்பொழுதுதான் வாழ்வு அழகும் ஒளியும் நிறைந்து விளங்கும் என்பது அவன் கொள்கை. எனவே போலிகளை அவனுக்குக் கூண்டோடு பிடிக்காது, வேஷதாரிகளைப் பச்சைநாவியாக வெறுப்பவன் அவன்.

அவன் காலத்திலிருந்த தேசீயத் தலைவர்களில் மிதவாதிகளை—சுயநல, வெளிவேஷக்காரர்களை - அவர்களின் சந்தர்ப்பவாத லீலா விநோதங்களை அவன் மன்னிக்கவே இல்லை. நக்கலும் நையாண்டியும் கையாடி, அவர்களைச் சந்திசிரிக்க அடித்தான். 'நடிப்புச் சுதேசிகள்' என்ற பாட்டில் கபட நாடக அரசியல்வாதிகளின் குணாதசயங்களை, கிண்டல் சுவையின் அழகு ஒழுக, அக்கு வேறு அலக்கு

வேருகப் பிய்த்துக் காட்டுகிருன். மிக மிக மிக உயர்ந்த பாட்டு அது.

'தொண்டு செய்யும் அடிமை' என்ற பாட்டில், அதிகார ஆங்கிலேயன் வாயில் வைத்து, சுதந்திர ஈட்டத்திற்கு இடையூருன நமது குறைகள் இவையிவை யென்பதைக் குத்திக் குத்திக் காட்டுகிருன் பாரதி. அடிமையின் பண்புகள் வேறு, விடுதலை வீரரின் பண்புகள் வேறு என்பதைத் திறம்படச் சித்தரித்துக் காட்டுகிருன்.

"நம்ம ஜாதிக்கடுக்குமோ". "நாம் என்ன செய்வோம்" ஆகிய பாடல்களில், மேதா, கோகலே ஆகிய நிதானக் கட்சியாரின் சிந்தனை ஓட்டத்தை அவர்களின் வாய்வழியாக வெளிக் கொணர்ந்து கேலி செய்கிருன்.

இவ்வாறு தேசீய இயக்கத்திற்கு, களைகட்டு, உரமிட்டு, நன்னீர்ப் பாய்ச்சும் பாரதியின் திறம் அரிதரிது

*தேசீயத் தலைவர்கள் :*

வீழ்ந்து கிடந்த பாரதநாட்டின் துயர்தீர்க்க, தன்னல மறந்து அல்லும் பகலும் அறுபது நாழிகையும் அரும்பாடு படும் பெரியார்கள், மனங்குவிந்த வணக்கத்திற்கு உரியவர்கள் என்பது பாரதியின் துணிபு. நாட்டு விடுதலைக்காகவும், மக்கள் நல்வாழ்வுக்காகவும் போராடிய எந்தச் சான்ருேனும் பாரதியின் திருப்புகழ் பெருது போனதில்லை.

காந்தியடிகளை வாழ்த்தி ஒரு பஞ்சகம் (ஐந்து விருத்தங்கள்) பாடியிருக்கிருன் பாரதி. 1920-21-ல், ஒத்துழையாமைக் காலத்தில், விடுதலை—விழிப்புணர்ச்சி கொண்ட இந்தியப் பொதுமக்களின் ஒப்பற்ற தலைவராக விளங்கினுர் காந்தியடிகள். தேசீய இயக்கத்தில்-பிரிட்டிஷாரின் ஏகாதிபத்யக் கொடுங்கோலை எதிர்த்து, பாரதப் பொதுமக்கள் நடத்திய ஏகாதிபத்ய - எதிர்ப்பு அறப் போராட்டத்தில் (சத்யாக்கிரகத்தில்) தனக்குத்தானே நிகரான தனிப் பெருந்

தலைவராகக் காந்தியடிகள் காட்சியளித்தார். கண்டான் இதனைப் பாரதி.

பாரதி கண்ட காந்தி,

''!........................................இந்த
வையத்து நாட்டிலெல்லாம்
தாழ்வுற்று வறுமை மிஞ்சி
விடுதலை தவறிக் கெட்டுப்
பாழ்பட்டு நின்றதாமோர்
பாரத தேசந்தன்னை
வாழ்விக்க வந்த காந்தி''

எனவே,

''வாழ்க நீ! எம்மான், காந்தி
மகாத்மா! நீ வாழ்க! வாழ்க!''

என்று மூவுலகும் ஒலிக்க பக்தியின் எழுச்சியில் பல்லாண்டு பாடுகிறான்.

'அடிமை வாழ்வு அகற்ற', 'படிமிசைத் தலைமை எய்தி', 'முடிவிலாக் கீர்த்தி பெற்று', 'புவிக்குளே முதன்மையுற்ற' அண்ணலின் செயலைப் பாராட்டுகிறான். ''பராதீன வெம்பிணி அகற்றிடும் வண்ணம்'' ''படிமிசைக்'. காந்தியடிகள் செய்த 'சூழ்ச்சி''யைப் பாராட்டி வரவேற்கிறான். மேலும்,

''பெருங்கொலை வழியாம் போர்வழி யிகழ்ந்தாய்;
அதனிலும் திறன்பெரி துடைத்தாய்
அருங்கலைவாணர் மெய்த்தொண்டர் தங்கள்
அறவழி யென்றுநீ அறிந்தாய்''

என்று பேருவகை துள்ளப் பாடுவதோடு மட்டுமன்றி,

''....இந்தியாவிற்கு வருங்கதிகண்டு பகைத்தொழில்
மறந்து வையகம் வாழ்க நல்லறத்தே''

என்று தனக்கு எத்தனையோ ஆண்டுகளுக்குப் பின்னால்

உருவாகப் போகும் நிலையை, அன்றே தனது தீர்க்க தரிச னத்தால் கண்டு வாழ்த்துகிருன்.

பின்னுல் காந்தி - புகழ் பாடி எழுந்த இலக்கிய முழு வதையும் ஒரு தராசுத் தட்டில் வைத்து, பாரதியின் இந்தப் பஞ்சகத்தை ஒரு தட்டில வைத்தால், இந்தத் தட்டுதான் தாழும் என்பது எனது பணிவான கருத்து.

திலகர் பாரதியின் அரசியல் குருதான். திலகர் பெருமானிடம் பாரதிக்கிருந்த பக்திக்கும் மதிப்புக்கும் எல்லே இல்லே "சாத்திரக் கட"லன்ன திலகர்தான் அந்நாளில்,

"துஞ்சுமட்டும் பாரத நாட்டிற்கே
தொண்டிழைக்கத் துணிந்தவர் யாவர்க்கும்"

இணையற்ற தலேவராய் விளங்கினுர். அவரை,

"வீரமிக்க மராட்டியர் ஆதர
மேவிப் பாரததேவி திருனுதல்
ஆரவைத்த திலகமெனத் திகழ்
ஐயனல்லிசைப பால கங்காதரன்
சேரலர்க்கு நினேக்கவும் தீயென
நின்றஎங்கள் திலகமுனிவர் கோன்
சீரடிக் கமலத்தினே வாழ்த்துவேன்"

என்று பாரதி, பக்திப் பெருக்கோடு தொழுது இறைஞ்சு கிருன்.

"வாழ்க திலகன் நாமம்" என்ற பாட்டின் மந்திர சக்தி சொல்லும் தரத்ததன்று.

"அச்சமில்லே அச்சமில்லே
அச்சமென்ப தில்லேயே"

என்ற அடியைப் போன்று,

"வாழ்க திலகன் நாமம்! வாழ்க! வாழ்கவே!
வீழ்க கொடுங்கோன்மை வீழ்க! வீழ்கவே!"

என்ற பல்லவியும், தேசீய இயக்கத்தின் படையெழுச்சி,

களில், போலீஸ் தடியடிகளையும் துப்பாக்கிப் பிரயோகங்களையும் எத்தனை தடவை துச்சமெனக் கருதச் செய்திருக்கின்றன தெரியுமா?

"நாலுதிசையும் ஸ்வாதந்தர்யநாதம் எழுகவே!
நரகமொத்த அடிமைவாழ்வு நைந்துகழிகவே!
ஏலுமனிதர் அறிவை அடர்க்கும் இருள் அழிகவே!
எந்தநாளும் உலகமீதில் அச்சம் ஒழிகவே!"

இந்த மணிமந்திரம் தமிழகத்தின் ஒவ்வொரு வீட்டு வாசலிலும் காட்சி யளிக்கும்படி செய்யவேண்டியது ஒவ்வொருவரின் கடமையாகும்.

தாதாபாய் நவுரோஜியைப்பற்றி, லாலாலஜபதிராயைப் பற்றி, அந்த பழுத்துக் கனிந்த பண்பட்ட தேசீயத் தலைவர்களைப் பற்றி, பாரதி கொண்டிருந்த மதிப்பு, அவர்கள்பால் பாரதிக்கிருந்த பக்தி, இவ்வள வவ்வளவல்ல.

"எமது பாரத நாட்டுப்பெண்
பல்லார் வயிற்றினு மந்நவுரோஜி
போற்புதல்வர் பிறந்து வாழ்க!"

என்று பாடுகிறான் பாரதி.

"அந்த மேலோன்
பெருமையை நன்கறிந்தவனைத் தெய்வமென"
"நெஞ்சினுளே பெட்பிற்பேணி வருமனிதர்
[எண்ணற்றார்"

என்று பாரதி லஜபதியின் பெருமையை வியந்தோதுகிறான்.

தலைவர் வ. உ. சிதம்பரம் பிள்ளை; நாவலர் சுப்பிரமணிய சிவா; கவிஞர் சுப்பிரமணிய பாரதி இந்த மூவருமே தமிழகத்தின் தேசீய இயக்கம் என்று ஒரு காலமிருந்தது.

மன்னரை மதிக்காத பாரதி, வ. உ. சி.யைத் "தமிழகத்தார் மன்னன்" என மதித்தான். "கேண்மைக்கோ" மதித்தான். பாரதி தமிழகத்தில் வேறு யாருக்கும் அந்த மதிப்புக் கொடுத்ததில்லை.

பாரதிக்கு வ.உ.சி.யிடமும், வ.உ.சிக்குப் பாரதியிடமும் நிகழ்ந்த உழுவலன்பு தமிழினத்தின் பெருமைக்கு உரியது.

பிறநாட்டுப் படிப்பினை

மனித வர்க்கத்தின் அடிப்படையான ஒற்றுமையில் பாரதி முழு நம்பிக்கை உடையவன். பாரத நாடு (தமிழகம்) உலகத்திற்கு அளிக்க வேண்டியதும், உலகத்தினிடம் பெற வேண்டியதும், எத்தனை எத்தனையோ விஷயங்கள் என்ற கருத்தோட்டமுடையவன். எனவே பாரத நாட்டின் விடு தலைக்காகப் பற்பல படிப்பினைகளை பற்பல நாடுகளிடமிருந்து திறந்த உள்ளத்துடன் கற்றிருக்கிறான் பாரதி.

சென்ற நூற்றுண்டில், ஐரோப்பாக் கண்டத்தில், சிறந்த தேச பக்தர்களில் ஒருவராகக் கருதப்பட்டவர் மாஜினி. இவர் இத்தாலிய நாட்டவர். தம்மால் நிறுவப் பட்ட 'இளமை இத்தாலி'' என்ற சங்கத்தில் இவர் செய்த சபதம், தேசீய உணர்ச்சியும் விடுதலை வேட்கையும் வெள்ளப் பெருக்காக ஓடிய நாடுகளிலெல்லாம் வரவேற்கப் பட்டது. அதைப் பாரதியும் உணர்ச்சித் துடிப்புடன் வர வேற்றான். அதை அற்புதமாகத் தமிழ் செய்து, தமிழிலக்கி யத்தில் புதுமை செய்தான்; தமிழ்மக்களுக்குப் புத்துணர்ச்சி பெய்தான்.

மாஜினியின் பேரால் பாரதி செய்யும் இந்தச் சபதத் தைப் படிக்கும் அல்லது பாடும் எந்த தேசபக்தனும் மெய் சிலிர்க்காமலோ, கண்ணீர் வடிக்காமலோ, பெருமூச்சு விடா மலோ இருக்க முடியாது. தானும் சபதம் ஏற்காமல் வாளா இருப்பதோ முடியவே முடியாது.

''பெல்ஜிய நாட்டுக்கு வாழ்த்து''க் கூறுகிறபொழுது, ''தொகையிலாப் படைகள் கொண்டு''' பகைவர் வேந்தன் வலிமையாற் புகுந்த வேளை'' ''உருளுக தலைகள் மானம் ஓங்குக!'' என்று பெல்ஜியம் நிமிர்ந்து நின்றதை நமக்கு

அறிவுறுத்துகிறான். இறுதியில் ''துயருண்டோ துணி வுள்ளோர்க்கே!'' என்ற கேள்வியைக் கேட்டு, ''இல்லை'' என்ற பதிலைத் தொக்கி நிற்கச் செய்கிறான்.

''புதிய ருஷியா'' என்ற பாட்டில் ஜாரின் வீழ்ச்சியைச் சித்திரிக்கிறான். ஜாரின் வீழ்ச்சியும் சோவியத் குடியரசின் மலர்ச்சியும் ஒரு நாணயத்தின்- ஒரு முழுப் பெரும் நிகழ்ச்சி யுன்- இரு பக்கங்கள்.

''இமயமலை வீழ்ந்தது போல்'' ஜார் வீழ்ந்தான். இவனைச் சூழ்ந்து நின்ற ''சுமடர்'' ''புயற்காற்றுச் சூறை தன்னில் திமு திமென மரம் விழுந்து காடெல்லாம் விற கான செய்திபோல'', ''சடசடவென்று சரிந்தார்''-இது ஒரு காட்சி.

''குடிமக்கள் சொன்னபடி குடிமக்கள் மேன்மையுறக்
குடிமைநீதி, கடியொன்றில் எழுந்தது''
''குடியரசென்று உலகறியக் கூறினார்''
''அடிமைக்குத் தளையில்லை யாருமிப்போ
தடிமையில்லை அறிக என்றார்''

-இது இரண்டாவது காட்சி!

இந்தக் காட்சிகளைப் பாரதி செய்தித்தாள்மூலம் அறிந்து மனக் கண் முன் நிறுத்தினான். லட்சிய சித்தியைக் கண்டு களிபேருவகை கொண்டான், மூவுலகும் கிடுகிடாய்க்க,

''இடிபட்ட சுவர்போலக் கலி விழுந்தான்
கிருதயுகம் எழுக!''

என்று முக்காரமிட்டு முழங்கினான்.

அவனுடைய லட்சியம் என்ன?

''பொய்க்கும் கலியை நான் கொன்று
பூலோகத்தார் கண்முன்னே

மொய்க்கும் கிருத யுகத்தினையே
கொணர்வேன்''

என்பதே. எனவே, ரஷ்யப் புரட்சியை,

''மாகாளி பராசக்தி கடைக்கண் வைத்தாளாங்கே
ஆகாவென் றெழுந்தது பார் யுகப்புரட்சி'

என்று கூறி ஆர்ப்பரிக்கிறான்.

பெண்கள் விடுதலை

சென்ற நூற்றாண்டிலும் இந்த நூற்றாண்டிலும் போகப் போக வெற்றிமேல் வெற்றி சூடி வரும் உலகளாவிய ஜன நாயக - சமதர்ம இயக்கத்தின் முக்கியமான அம்சங்கள் மூன்று: (1) அடிமை நாட்டு மக்கள் விடுதலை (2) பாட்டாளி மக்கள் விடுதலை (3) பெண் மக்கள் விடுதலை. இந்த அம்சங்கள் நெஞ்சை அள்ளும் விதத்தில் முழுப் பொலிவோடு எதிரொலிப்பதைப் பாரதி பாடல்களில் பரக்கக் காணலாம்.

பாரதியின் ''புதுமைப் பெண்'' பாடல் சாலச் சிறந்த புதுமைப் பாடல்கள். 'சுதந்திரப் பேரிகை' முழக்கும் புதுமைப் பெண்ணைக் கண்டு களித்து, ''எங்கள் சாதி செய்த தவப்பயன் வாழி!'' என்று வாழ்த்துகிறான்.

''போற்றி போற்றி யோராயிரம் போற்றிநின்
பொன்னடிக்குப் பல்லாயிரம் போற்றிகாண்''

என்று உதய கன்னியைப் போற்றி ஆனந்தக் கண்ணீர் வடிக்கிறான். ஏன்? பாரதி கண்ட புதுமைப்பெண்,

''மாற்றி வையம் புதுமையுறச் செய்து
மனிதர் தம்மை அமரர்களாக்கவே
ஆற்றல்கொண்ட பராசக்தி''

பெண்மையை வாழ்த்திப் பாரதி 'கூத்தாடும்' பாட்டு, ஒவ்வொரு தமிழனும், ஏன், ஒவ்வொரு மனிதனும் படித்து

இன்பமும் எக்களிப்பும் உறத்தக்கது. பாரதியின் "பெண் விடுதலைக் கும்மி" யைப் பொறுத்தமட்டில், அதைப் பாட அறியாத சிறுமி, தமிழகத்தின் எந்தப் பட்டிதொட்டியிலும், எந்த மூலை முடுக்கிலும் இல்லை என்ற நிலைமை ஏற்பட வேண்டும்.

தேசீய திட்டம்:

கன யந்திரத் தொழிலைப் பற்றியும், தேசீயத் திட்டத்தைப் பற்றியும் தொழிலாளர் மேம்பாட்டைப் பற்றியும் இன்றுதான் நாம் உணர ஆரம்பித்திருக்கிறோம். சுதந்திரம் கிடைப்பதற்கு எத்தனையோ ஆண்டுகளுக்கு முன்னரே, பாரதி அவைகளைப் பற்றித் தீர்க்கதரிசனத்தோடு பாடியிருக்கிறான்.

> "இரும்பைக் காய்ச்சி உருக்கிடுவீரே
> யந்திரங்கள் செய்திடுவீரே"

என்று பாடி, தொழிலின், கனயந்திரத் தொழிலின் முதல் தர முக்கியத்வத்தைப் பாடினான். அன்று பாரதி கனவு கண்ட தேசீயத் திட்டத்தின் பெருமைதான், என்னே! "வெள்ளிப் பனிமலையின் மீதுலவி" 'மேலைக் கடல் முழுதும் கப்பல் விட்டு" 'பள்ளித் தலமனைத்தும் கோயில் செய்வ" திலிருந்து, "ஆயுதம் செய்வது" "ஆலைகள் வைப்பது" உள்ளடக்கி, குடைகள், உழுபடைகள், கோணிகள் இரும்பாணிகள் செய்வதோடு, "நடையும் பறப்புமுணர் வண்டிகளும்" "ஞாலம் நடுங்கவரும் கப்பல்களும்" செய்து, உலகுத் தொழிலனைத்தும் உவந்து செய்யும்படி ஊக்குவித்து, நமது தேசீய வாழ்வு செழித்துக் கொழுத்து 'ஜம்' மென்று உயரத்தக்க விதத்தில் ஒரு பிரம்மாண்டமான திட்டத்தை அன்றே உருவாக்கிக் காட்டினான் பாரதி. இந்தப் பெருமை இந்தியாவில் எந்தக் கவியரசனுக்கும் வாய்க்கவில்லை.

> "அரும்பும் வியர்வை உதிர்த்துப் புவிமேல்
> ஆயிரம் தொழில் செய்திடுவீரே!
> பெரும்புகழ் நுமக்கே இசைக்கின்றேன்
> பிரமதேவன் கலையிங்கு நீரே!"

இதைவிடத் தொழிலாளர்களை மேன்மைப்படுத்திய புலவன் யார்?

சமூக நீதி:

முரசுப் பாட்டில் 19, 20-ம் நூற்றுண்டுகளின் உலக சமூக நீதிகளையும் பாரத நாட்டிற்குச் சிறப்பான சமூக நீதிகளையும் தெள்ளித் தெள்ளிப் பெய்து, நெய்து, "ஊருக்கு நல்லது" சொல்லியிருக்கிறுன்.

பாரதியின், "பாப்பாப் பாட்டு" "புதிய ஆத்திசூடி". ஆகியவற்றின் அருமை பெருமைகளைப் பற்றிச் சொல்லவே வேண்டுவதில்லை.

> "வாழிய செந்தமிழ் வாழ்க நற்றமிழர்!
> வாழிய பாரத மணித்திருநாடு!"

என்று புத்தாண்டு வாழ்த்துப் பாடுகிறுனே பாரதி, அந்த வாழ்த்து, தமிழும் தமிழினமும் உள்ளவரையில் 'கணீர் கணீர்' ரென்று ஒலித்துக்கொண்டே யிருக்கும்.

இறுதியாக ஒரு சொல்: இந்த நூலில் வரும் பாடல்களை, ஒவ்வொரு தமிழ் மகன், தமிழ் மகளுடைய மனமும் நாவும் என்றும் எப்பொழுதும் பயின்றுகொண்டிருப்பதுவே இப்பாடல்களைத் தொகுத்துத் தந்த நாம் கோரும் கைம்மாறு.

பாரதி வாழ்க!
பாரதி தமிழ் வாழ்க!

ஜீவா.
(7-9-55)

(ஜனசக்தி பிரசுராலயம் 1955-ம் ஆண்டு பாரதி தினத்தன்று வெளியிட்ட "பாரதி பாடல்கள்" என்ற தொகுப்புக்கு எழுதிய முன்னுரை.)

# மஹாகவி பாரதியின் தத்துவதரிசனம்

"ஜீவா"

ஜனசக்தி, (11—9-55)

உபநிடத்தில் ஒரு முனிவரிடம் கடவுளின் விளக்கம் என்ன என்று வற்புறுத்திக் கேட்கப்பட்டது. அவர் மௌனம் சாதித்தார்-கடவுள் மௌனம் எனப் பொருள் படும்படி சொற்களில் கடவுளை விளக்கும்படி மீண்டும் முனிவர் வற்புறுத்தப்பட்டார். இந்தத் தடவை அவர் "நேதி, நேதி" (இதுவல்ல, இதுவல்ல) என்று பதில் அளித்தார். "எதிர் மறையான விளக்கம் போதாது; நேரான விளக்கம் வேண்டும்" என்று திரும்பவும் வற் புறுத்தப் பட்டார். இந்தத் தடவை, அவர், ஆழ்ந்த பொருள் செறிந்த ஆனால் எளிய சொற்களில், "தத்துவம் அசி" (நீயே அது) என்று அமைதியாகப் பதிலிறுத்தார்.

"தத்துவ மசி" என்ற உபநிஷத மகா மந்திரத்தைத் தான் பாரதி, தனது "புதிய ஆத்திசூடியில்" 'தெய்வம் நீ என்றுணர்" என்ற வரிசையில் குறிக்கிறான்.

பாரதி உபநிடதங்களில் ஆழ்ந்த ஈடுபாடு உடையவன். எனவே,

"பன்னரும் உபநிட நூலெங்கள் நூலே
பார்மிசை ஏதொரு நூல் இதுபோலே"

என்று பாடுகிறான்

தத்துவ மேதாவி

வடமொழியில் சிறந்த பயிற்சியுடைய பாரதி, 'பகவத் கீதை'க்கு ஒரு அருமையான பாரத முத்திரை யடிக்கப்பட்ட

உரையும், ஒரு சிறந்த முன்னுரையும் எழுதியிருக்கிறான். வேதத்திலிருந்து சிற்சில துணுக்குகளைத் தமிழாக்கி யுள்ளான். 'பதஞ்சலி சூத்திரத்தை' தமிழாக்கி யிருக்கிறான். சாருவாகம், பௌத்தம், சமணம், சாங்கியம், நியாயம், (மீமாம்சை) வேதாந்தம் ஆகிய அறுவகைத் தரிசனங்களையும் பயின்றவன் பாரதி.

'பகவான் விவேகானந்தரின் தர்மபுத்திரியான' நிவேதிதா தேவியின் தொடர்பும், தெய்வமில்லை என்று திடசங்கற்பம் கொண்டிருந்த புதுவை பொன்னு முருகேச பிள்ளையின் ஆப்த நட்பும், தலை சிறந்த இந்தியத் தத்துவ ஞானியான அரவிந்தரின் நெருங்கிய பழக்கமும் பாரதிக்கு வாய்த்ததால், மேனாட்டுத் தத்துவ ஞானத்தையும் பாரத நாட்டுத் தத்துவ ஞானத்தையும் விவாதிக்க, தெளிவடைய வாய்ப்புக் கிடைத்தது.

பாரதி 1911-12 வாக்கில், ஸ்டாண்டர்டு' பத்திரிகையில் குடந்தை சுந்தரராம ஐயரோடு அத்வைதத்தைப் பற்றி நடத்திய சொற்போரில், அரவிந்தராலும் இதர அறிஞர்களாலும் தத்துவ மேதாவி என்று புகழப்பட்டான்.

இவற்றிலிருந்து பாரதி மகாகவி மட்டுமல்ல, உயர் தரத் தத்துவ ஞானி என்பதும் விளங்கும். நிற்க,

### சிமிழில் அடையாதீர்

சில ஆண்டுகளுக்கு முன் ராஜாஜி தாம் எழுதிய "அச்சமில்லை" என்ற சிறு நூலில் "பாரதியார் தேசபக்தராக வாழ்க்கையைத் துவக்கி, கவியாக மலர்ந்து, இறுதியில் பக்குவமான வேதாந்தியாகப் பழுத்திருக்கிறார்" என்பது போல் குறிப்பிட்டார். பாரதியின் பாஸ்வெலான வ. ரா. உடனேயே பளிச்சென்று பதில் கொடுத்தார். தமது 'மகாகவி பாரதியார்' என்ற நூலில் "பாரதியார் ஆத்ம விசாரம் செய்யும் கழைக் கூத்தாடியல்லர்............அவர் பாடல்

களில் அசட்டு வேதாந்தம் எதுவும் இல்லை......... அவர் ஆஷாடபூதி வேதாந்தியே அல்லர். ராஜாஜி போன்றவர்கள் செப்படி வித்தை செய்து அவரை வேதாந்தச் சிமிழிலே போட்டு அடைக்க வேண்டாம்'' என்று மறுப்புக் கூறினர்.

உடனேயே மற்றொரு பேராசிரியர் "பாரதி பாடிய தேசியப் பாடல்கள் ஐம்பத்தேழுதான். ஆனல் தோத்திரப் பாடல்களோ அறுபத்தாறு. வேதாந்தப் பாடல்கள் முப்பது. இதற்கு மேல் கண்ணன் பாட்டு வேறு. பாரதி அறுபத்தாறு வேறு. எனவே, பக்திப் பாடல்களும் வேதாந்தப் பாடல்களும்தான் அதிகம் பாடியிருக்கிருர். ஆகவே, பாரதியார் வேதாந்தி என்பதே பொருந்தும்'' என்று கணக்குப் போட்டு பாரதியை வேதாந்தியாக்கினர். அவரைப் போல், இன்று பல தமிழறிஞர்களும் பேராசிரியர்களும் பாரதியை வேதாந்தியாக்கி வருகிருர்கள்.

## வாழ்க்கைக் கண்ணேட்டம்

ஆனல், உண்மையில் பாரதியின் தத்துவ தரிசனம் என்ன? வாழ்க்கைக் கண்ணேட்டம் என்ன? இதை நான் எவ்வாறு பார்க்கிறேன் தெரியுமா?

பாரதி கடவுள் உண்டென்ற கொள்கை யுடையவன் தான். ஆயினும் அவன் 'ஒருவனே தேவன்' என்பதையோ, கடவுள் 'இப்படியன், இவ்வண்ணத்தன், இந் நிறத்தன்' என்பதையோ நிலைநாட்டுவதை முதற்பெருங் கொள்கையாகக் கொள்ளவில்லை. பாரதியின் இலக்கிய முழுவதையும் துருவி ஆராய்ந்தால்,-தேசீயப் பாடல்களையோ, தோத்திரப் பாடல்களையோ, வேதாந்தப் பாடல்களையோ, இதரப் பாடல்களையோ, எதை ஆராய்ந்து பார்த்தாலும்- இந்த வாழ்வையும், இதில் மனித வர்க்கம் முழுவதும் உயர்நிலை எய்தி வாழ்வதையும் அதற்கான கால மாறுதலையும் பெரு நோக்காகக் கொண்டு நிற்கிருன் என்பதைத் தெளிவாகக் காண முடியும்.

பாரதியின் தத்துவ தரிசனத்தைக் காண, அவன் தனது இலக்கியத்தில் அங்கங்கே பயில்கிற 'இங்கு', 'அமர நிலை' 'கிருதயுகம்' என்ற மூன்று சொற்களையும் அவை எவ்வாறு பயிலப் படுகின்றன என்பதையும் கவனிக்க வேண்டும்.

முதலில் 'இங்கு' என்ற சொல்லை எடுத்துக் கொள்வோம். 'இந்தப் பிறப்பில்' (இம்மையில்) 'இந்த உலகில்' என்ற பொருள் படவே பாரதி அதை உபயோகிக்கிருன்.

> ''செத்தபிறகு சிவலோகம் வைகுந்தம்
> சேர்ந்திடலா மென்றேஎண்ணி யிருப்பார்
> பித்தமனிதர் அவர்சொல்லும் சாத்திரம்
> பேயுரையாமென்று ஊதேடா சங்கம்''

(வேதாந்த-சங்கு)

இந்தப் பாட்டில், செத்தபிறகு வாழ்வ உண்டென்றே, சிவலோகம், வைகுந்தம் உண்டென்றே நினைக்கும் கருத்தை மண்டையிலடித்து நசுக்கி விடுகிருன்.

> ''மண் பயனுற வேண்டும்
> வானகம் இங்குதென் படவேண்டும்''

இவ்வாறு 'வேண்டும்' என்ற பாட்டில் சொர்க்கம் வேறு எங்கேயும் இல்லை, அது இங்கேயே தோன்ற வேண்டும் என்கிருன்.

வீடு (மோட்சம்) வேறு எங்கேயும் இல்லை, அது இங்கேயே இருக்கிறது. 'கவலை துறந்து இங்கு வாழ்வதே வீடு''என்று ''அறிவே தெய்வம்'' என்ற பாட்டில் பாடுகிருன்.

> ''ஜயமுண்டு பயமில்லை மனமே - இந்த
> ஜன்மத்திலே விடுதலையுண்டு; நிலையுண்டு''

என்று ''ஜீவன் முக்தி'' என்ற பாட்டில் இந்தப் பிறப்பிலேயே விடுதலை உண்டு என்கின்ருன்.





இரண்டாவது "அமரநிலை!" என்ற சொல்லை எடுத்துக் கொள்வோம். "புதிய ஆத்தி சூடி" பரம்பொருள் வாழ்த்தில்,

"பலவகையாகப் பரவிடும் பரம்பொருள்
ஒன்றே; அதனியல் ஒளியுறும் அறிவாம்
அதனிலை கண்டார் அல்லலை யகற்றினர்;
அதனருள் வாழ்த்தி அமரவாழ் வெய்துவோம்"

என்று அமரவாழ்வைக் குறிப்பிடுகிறான்.

காரைக்குடி இந்து மதாபிமான சங்கத்தை வாழ்த்தும் போது,

"எப்போதும் ஆனந்தசுடர் நிலையில்வாழ்ந்
துயிர்கட் கினிது செய்வோர்
தப்பாதே இவ்வுலகில் அமரநிலை பெற்றிடுவார்"

என்றும் உயிர்ப் பணி செய்வோர் அமரநிலை அடைவர் என் கிறான்.

"பாரதி அறுபத்தாறில்,"

"நீங்காத சிவசக்தி யருளைப் பெற்றோம்
நிலத்தின்மிசை அமரநிலை யுற்றோமப்பா"

என்று பாடி, 'சக்தி' அருளால் 'அமர நிலை' அடையலாம் என்கிறான்.

"குமரிநின் னையிங்கே - பெற்றோர்
கோடியின்ப முற்றார்
அமரர்போல வாழ்வேன் - என்மேல்
அன்பு கொள்வை யாயின்"

என்று பாடி பராசக்தி அருளால் 'அமர வாழ்வு' நிச்சயம் என்கிறான்.

இந்த உறுதிதான் குழந்தைகளுக்காகப் பாடிய 'கண்ணன்' பாட்டில்,

''இங்கே அமரர்சங்கம் தோன்றும்
மங்கும் தீமை பொங்கும் நலமே''

என்று பாடச் செய்கிறது.

''தமிழ்'' என்ற பாட்டில்,

''தெள்ளுற்ற தமிழமுதின்
சுவை கண்டார்
இங்கு அமரர் சிறப்புக் கண்டார்''

என்று பாடுகிருன்.

''புதுமைப் பெண்'' என்ற பாட்டில் புதுமைப் பெண்ணை,

''மாற்றி வையம் புதுமையுறச் செய்து
மனிதர் தம்மை அமரர்களாக்கவே
ஆற்றல் கொண்ட பராசக்தி''

என்று பாடுகிருன்.

''பாரத சமுதாய''ப் பாட்டில்,

''எல்லாரும் அமர நிலை எய்தும்நன் முறையை
இந்தியா உலகிற் களிக்கும்''

என்று பாடுகிருன்.

கிருத யுகம்

மூன்ருவது கிருதயுகம் என்ற சொல்லை எடுத்துக் கொள்வோம்.

''விநாயகர் நான் மணிமாலை''யில்,

''வீழ்க கலியின் வலியெல்லாம்
கிருதயுகந் தான் மேவுகவே''

என்று கலியுகம் ஒழியவும் கிருதயுகம் எழவும் விநாயகரிடம் அருள் வேண்டுகிருன்.

"நல்ல குணங்களே நம்மிடை அமரர்
பதங்களாம், கண்டீர், பாரிடை மக்களே!
கிருதயுகத்தினைக் கேடின்றி நிறுத்த
விரதம் நான்கொண்டனன்"

என்று அதே "நான்மணிமாலை"யில் "அமரநிலை"க்கு விளக்கம் கூறி, அதே "அமரநிலை"யை மனித வர்க்கம் அடையத் தான் விரதம் பூண்டு நிற்பதையும் மக்களுக்கு அறிவிக்கிறான்.

"பொங்கும் கலியை நான்கொன்று
பூலோகத்தார் கண் முன்னே
மெய்க்கும் கிருத யுகத்தினையே
கொணர்வேன் தெய்வ விதியிஃதே"

என்று விநாயகரின் அருட் பிரசாதத்தோடு எதிர்கால வெற்றியிலுள்ள அசையாத நம்பிக்கையை வெளியிடுகிறான். மேலும்,

"சத்திய யுகத்தை அகத்திலிருத்தித்
திறத்தை நமக்கருளிச் செய்யும்உத்தமி"

என்று உஜ்ஜியினியைத் துதிபாடுகிறான்.
இன்னும்,

"— நினதருளில்
உய்யக்கருணை செய்வாயே — பெருமை கொண்டு
வையந் தழைக்க வைப்பானே — அமரயுகம்
செய்யத் துணிந்து நிற்பேனே"

என்று பாடி, பராசக்தியின் அருள் கிடைத்தால் கிருதயுகம் (அமரயுகம், சத்யயுகம் என்பதும் அதுதான்) காண முடியும் என்ற கருத்தை வெளியிடுகிறான்.

இவ்வாறு கலியுக ஒழிப்பையும் கிருதயுக உதயத்தையும் பற்றிப் பாடிய பாரதிதான் ஜார் வீழ்ச்சியை நடத்திய

ருஷியப் புரட்சியைக் கண்டதும் (துல்லியமாகச் சொல்லப் போனால் காதால் கேட்டதும்) நிமிஷம் சுணங்காமல்,

''மாகாளி பராசக்தி கடைக்கண் வைத்தாளாங்கே
ஆகாவென் றெழுந்ததுபார் யுகப்புரட்சி''

என்று உணர்ச்சி வெள்ளம் கரையுடைத்துப் பாய ஆவேசமாகக் கவிதை பொழிந்து ஆனந்தக் கூத்தாடுகிறான்.

இறுதியாக அதே ''புதிய ருஷியா'' பாட்டில்

''இடிபட்ட சுவர் போலக் கலி விழுந்தான்
கிருதயுகம் எழுக மாதோ''

என்று தனது லட்சிய சித்தி எவ்வாறு நிகழ்ந்தது, நிகழும் என்பதைத் தெள்ளத் தெளியக் காட்டுகிறான்.

ஒப்பாரி வேதாந்தியல்ல

உலகம், வாழ்க்கை, யாக்கை, இளமை, செல்வம்- இவைகளின் ''நிலையாமையை''ப் பற்றி மூகாரி பாடும் ஒப்பாரி வேதாந்தியல்ல பாரதி. ''வாழ்வாவது மாயம், இது மண்ணாவது திண்ணம்'' என்று'' அறம் பாடவந்த' புலவனுமல்ல.

''நெஞ்சில் கவலையை நிதமும் பயிராக்கி
அஞ்சி உயிர்வாழ்தல் அறியாமை''
''எத்தனை கோடியின்பங்கள் வைத்தாய்—எங்கள்
இறைவா, இறைவா, இறைவா''
''துன்பமே இயற்கையெனும்
சொல்லை மறந்திடுவோம்
இன்பமே வேண்டி நிற்போம்
யாவும் அவள் தருவாள்''
''வியனுலகத்தினையும் அமுதெனை நுகரும்
வேதவாழ்வினைக் கைப்பிடித்தோம்''

என்றெல்லாம் பாடி மக்களுக்கு வாழ்வில் நம்பிக்கையும் சுவையும் ஏற்பட வாழ்ந்தவன் பாரதி.

எனவே,

"அச்சம் தவிர்", "தெய்வம் நீ என்றுணர்", "வையத் தலைமை கொள்" என்று நல்லமுதம் ஊட்டி எதிர்காலப் பயிரை வளர்க்கத் துணிகிறான்.

"வெள்ளத்தின் பெருக்கைப்போல் கவிப்பெருக்கும்
கலைப்பெருக்கும் மேவுமாயின்
பள்ளத்தில் வீழ்ந்திருக்கும் குருடரெல்லாம்
விழிபெற்றுப் பதவிகொள்வார்"

என்று கவிஞனுக்கும் கலைஞனுக்கும் போதிக்கிறான்.

பாரதியிடம் 'சில தெய்வங்கள்' யாருக்கும் தெரியாமல் இரகசியமாக வந்து பேசின. அதை அவன் அம்பலப் படுத்துகிறான் :

"நாட்டு மக்கள் பிணியும் வறுமையும்
நையப் பாடென் றொரு தெய்வம் கூறுமே;
கூட்டி மானுடச் சாதியை ஒன்றெனக்
கொண்டு வையமுழுதும் பயனுறப்
பாட்டிலே அறம் காட்டெனும் ஓர் தெய்வம்;
பண்ணிலின்பமும் கற்பனை விந்தையும்
ஊட்டி யெங்கும் உவகை பெருகிட
ஓங்கும் இன்கவி ஓதெனும் வேறொன்றே"

வையத்தைப் பாலித்திட

இந்தத் "தெய்வங்கள்" இவ்வாறு கூறியதால் பாரதிக்கு நெஞ்சில் ஆசை துளிர்க்கிறது.

"நாட்டு மக்கள் நலமுற்று வாழவும்
நானிலத்தவர் மேனிலை எய்தவும்
பாட்டிலே தனியின்பத்தை நாட்டவும்
பண்ணிலே களி கூட்டவும்"

அவனுக்கு வேட்கை அதிகரிக்கிறது. ஆகவே, "பாட்டுத் திறத்தாலே இவ்வையத்தைப் பாலித்திடவேணும்" என்று துடியாய்த் துடிக்கிருன்.

"வல்லமை தாராயோ - இந்த
மாநிலம் பயனுற வாழ்வதற்கே"

என்று பராசக்தியிடம் வரம் கேட்கிருன்.

"நமக்குத் தொழில் கவிதை நாட்டுக்குழைத்தல்
இமைப்பொழுதும் சோராதிருத்தல்"

என்று தனது ஆயுள் தொழிலையும் குறிக்கோளையும் அரங் கேற்றுகிருன்.

இத்தகைய பாரதியின் தத்துவக் காட்சிதான், இங்கே - இவ்வுலகத்தில் மனித வர்க்கம் உயர் வாழ் வாகிய "அமரநிலை" எய்தும் கிருதயுகம் (நவயுகம்) மலர வேண்டுமென்பது.

வரங் கேட்ட கிருதயுகம், தனது நிழலாடிய கிருதயுகம், ரஷ்யப் புரட்சி வெடித்ததில் பிறந்து விட்டதைப் பார்க் கிருன். இதுவரை பராசக்தியின் அருள் என்று உருவகப் படுத்தியது, இங்கு ஜனசக்தியின் பிரளய எழுச்சியாக விளங்குகிறது. பாரதி வளர வளர, சிந்தனையின் அனுபவம் முதிர முதிர, தத்துவ தரிசனத்தில் தெளிவும் எறுகிறது.

இந்தியா அளிக்கும்

தத்துவக் காட்சியில் இறுதியாகப் பாரதி காணும் கனவுச் சித்திரம் வெளிப்படுகிறது. அதுதான்,

"முப்பதுகோடி ஜனங்களின் சங்க
முழுமைக்கும் பொதுஉடைமை

"ஒப்பிலாத சமுதாயம்
உலகத்துக்கொரு புதுமை"

இந்தப் புதுமையில்,

"எல்லோரும் ஓர்குலம் எல்லோரும் ஓர்இனம்
எல்லோரும் இந்நாட்டு மக்கள்
எல்லோரும் ஓர் நிறை
எல்லோரும் ஓர் விலை
எல்லோரும் இந்நாட்டு மன்னர்"

என்ற முழு வடிவமான ஜனநாயக - சமதர்ம சமுதாயக் காட்சி அவனுக்குப் படுகிறது. ருஷிய அனுபவத்தையும் பாரதப் பண்பாட்டையும் (தமிழ்ப் பண்பாடு உள்ளிட்ட கூட்டுப் பண்பாடு) குழைத்து,ப் பாரதி தனக்கே உரிய பாணியில்,

"எல்லோரும் அமர நிலை எய்தும் - நன்முறையை
இந்தியா உலகிற் களிக்கும் - ஆம்
இந்தியா உலகிற் களிக்கும்"

என்று பாடுகிறன்.

இதுதான் பாரதியின் தத்துவ தரிசனம்.

# விடுதலைக் கவி பாரதி

## சமாதான வாழ்வுக்குச் சங்கநாதம் செய்தார்

மானிடப் பிறப்பை "நல்லதோர் வீணை" என்று பாரதி உவமிக்கிறான். இது நமக்குத் தெரியும். "மானிடராதல் அரிது" என்று அவ்வையும், "மனிதப் பிறவியும் வேண்டுவதே இந்த மானிலத்தே" என்று நாவுக்கரசரும் கூறிய தமிழகத்தில், மனிதப் பிறவியைப் பாரதி மாட்சிமைப் படுத்தியதில் புதுமையோ வியப்போ இல்லை. ஆனால்,

> "ஞானாகாசத்து நடுவே நின்றுநான்
> பூமண்டலத்தில் அன்பும் பொறையும்
> விளங்குக, துன்பமு மிடிமையும் நோவும்
> சாவும் நீங்கிச் சார்ந்த பல்லுயிரெலாம்
> இன்புற்று வாழ்க என்பேன்"

என்று "விநாயகர் நான்மணிமாலை"யில் பாரதி பாடுகிறானே இந்த அடிகளில் சமாதானக் கதிர்கள் புத்தொளி வீசுவதை நாம் காண்கிறோம். உலக மக்கள் சண்டை சச்சரவுகளால், தாங்கொணா வறுமையால், நோய் நொடிகளால் சாவது நீங்கி இன்புற்று வாழ வேண்டுமென்று வரம் கேட்பது புதுமைக் கருத்துத்தானே?

## அடிமைப் படுத்தும் அரசர்களை எதிர்த்தார்

பாரதி, முதலாவது உலக மகா யுத்தத்தின் கோரக் கொடுமைகளையும், படுநாசச் சேதங்களையும் அறிந்துணர்ந்த

வன். போட்டியிட்டு நடத்திய ஏகாதிபத்ய அரசர்களைப் பற்றிப் பாரதிப் பாடுகிறன்.

''இற்றை நாள்வரை யானும் அறமிலா மறவர்
குற்றமே தமது மகுடமாக் கொண்டோர்
**மற்றை மனிதரை அடிமைப் படுத்தலே**
**முற்றிய அறிவின் முறையென் றெண்ணுவார்**
பற்றை அரசர் பழிபடுடையுடன்
சொற்றைநீதி தொகுத்து வைத்திருந்தார்''

என்று, ''பற்றை அரசர்'' என்றும், ''பழிபடுடை'' என்றும், ''சொற்றைய நீதி'' என்றும் வன்மையாக நிந்தித்து, மனித வர்க்கத்திற்கு சர்வநாசம் விளைக்கும் நீசநாச மகா யுத்தத்தை உக்ரமாகக் கடியும் பாரதியின் சமாதான உணர்ச்சி வேகம் இன்றைய நாட்டு வாழ்வில் நிலைபெறத் தக்கது.

அன்பு முரசு கொட்டினன்

தமிழுடம்பு எடுத்த புது உலகக் கவியான பாரதி, ''ஊருக்கு நல்லது'' சொல்லி, கோடிக்கால் பூதமான விவசாயப் பெரும் சமுதாயத்தை, சமாதான இயக்கத்திற்குப் படைதிரட்டும் வித்தையைப் பாருங்கள்!

முதலில்,

''ஊருக்கு நல்லது சொல்வேன்-எனக்கு
உண்மை தெரிந்தது சொல்வேன்''

என்று ஆரம்பித்து பச்சைக் குழந்தைக்கும் புரிய வைக்கும் அருமையினும் அருமையான பாணியில், உலக முழுதும் ஒன்றித்து அமைதியில் திளைக்க இன்றியமையாத பல உண்மைகளை, இந்தியாவின் யதார்த்தச் சூழ்நிலைக்கு ஒப்ப தாய் மகவுக்குச் சங்கில் பால் புகட்டுவது மாதிரிப் புகட்டுகிறன்,

''ஒன்றென்று கொட்டு முரசே—அன்பில்
ஓங்கென்று கொட்டு முரசே
நன்றென்று கொட்டு முரசே—இந்த
நானிலம் வாழ்பவருக் கெல்லாம்''

என அன்பு முரசு கொட்டி, நானிலத்து மக்களையெல்லாம் ஒன்றுபட வைக்கிறான்.

''அன்பின் வழியது உயிர் நிலை''

என்பது வள்ளுவன் வாக்கு. அதைத் தொடர்ந்து,

''முன்புபின் பின்றி மூவுலகத்தினும்
அன்பினல்லதோர் ஆக்கம் உண்டாகுமோ''

என்று கம்பன் கேட்கிறான். இவர் அடிச்சுவட்டைப் பின் பற்றிப் பாரதி அன்பே - மக்களின் சகோதர நல்லுறவே- உலக ஒற்றுமைக்கு ஆணிவேர் என்பதை, வற்புறுத்திப் பல அடிகளில் பாடுகிறான்.

''அன்பென்று கொட்டு முரசே-அதில்
ஆக்கமுண்டா மென்று கொட்டு''
''அன்பென்று கொட்டு முரசே-மக்கள்
அத்தனை பேரும் நிகராம்''

''அன்பென்று கொட்டு முரசே-அதில்
யார்க்கும் விடுதலை யுண்டு''

இவ்வாறு அன்புக் கொடியை உயர்த்திப் பிடிக்கிறான். இதிலிருந்து மெய்யான சகோதரத்துவம் சுரக்கிறது.

''உடன் பிறந்தார்களைப் போல-இவ்
உலகில் மனிதரெல்லோரும்;
இடம் பெரிதுண்டு வையத்தில்-இதில்
ஏதுக்குச் சண்டைகள் செய்வீர்?''

என்று உலகதிர வினவி, போர் வெறியர்களின் மூர்க்காவேசத்தை மனித தர்மத்தால் சுக்கு ஆயிரமாக உடைத்தெறிகிறான். இன்னும் ஒரு படி மேற்சென்று,

''இன்பங்கள் யாவும் பெருகும் – இங்கு
யாவரும் ஒன்றென்று கண்டால்''

என்று வாழும் வழியைக் காட்டி, யுத்தத்திற்கு அடி மூல மான பகைமைத் தீயை அவிக்க முயல்கிறான்.

''வயிற்றுக்குச் சோறுண்டு கண்டீர் – இங்கு
வாழு மனிதரெல் லோர்க்கும்
பயிற்றி உழுதுண்டு வாழ்வீர் – பிறர்
பங்கைத் திருடுதல் வேண்டாம்''

என்று பாடி யுத்தத்தின் மூல காரணமான கொள்ளைக்காரத் தனத்தை அடியோடு ஒழிக்கும்படி ஆணித்தரமாகப் பாரதி அறிவுறுத்துகிறான்.

''உடன் பிறந்தார்களைப் போலே - இவ்
உலகில் மனிதரெல்லோரும்
திடங்கொண்டவர் மெலிந்தோரை - இங்கு
தின்று பிழைத்திடலாமோ!''

பாரதியின் இந்த இடி ஓசை மிக்க குரலெழுச்சிதானே, இன்று ஆசிய மக்களின் மென்மேலும் திரண்டு வரும் குரலெழுச்சியாக மாறி, ஆங்கில - அமெரிக்க ஏகாதிபத்ய கொள்ளைக்கார வெறியர்கள் கிடுகிடாய்க்கும்படி ஒலிக்கிறது.

''பாருக்குள்ளே சமத்தன்மை - தொடர்
பற்றும் சகோதரத்தன்மை
யாருக்கும் தீமை செய்யாது - புவி
எங்கும் விடுதலை செய்யும்''

என்று பாரதி ரீங்காரமிட்டுப் பாடுகிறான். பாடி ஒரு மனிதனை ஒரு மனிதன் மிதித்து, ஒரு மக்களை ஒரு மக்கள் அடக்கி, ஒரு நாட்டை ஒரு நாடு அடிமை செய்யும் அநாகரீக அநியாயத்தின் மூலாதாரத்தைத் தவிடு பொடியாக்கி விடுதலை வாழ்வு 'ஜாம் ஜா'மென்று முன்னேறும் திசை வழியைக் காட்டுகிறான் பாரதி. இவ்வாறு போர் வெறியை

ஆணி வேர், பக்க வேர் சல்லி வேரோடு கல்லி யெறிவதில், மக்கள் சகோதரத்துவம் கொழுந்துவிட்டு எரியச் செய்வதில், உலக சமாதானத்தை நிலைநாட்டுவதில் பாரதி தனக்குள்ள அழுத்தமான நம்பிக்கையை உலகறிய முரசடிக்கிறான்.

இந்தச் சமாதான விருப்பத்தின் தெள்ளிய உறுதிதான்,

"பெருங் கொலை வழியாம்
போர்வழி யிகழ்ந்தாய்;
அதனிலும் திறன் பெரிதுடைத்தாம்
அருங்கலை வாணர் மெய்த்
தொண்டர் தங்கள்
அறவழி என்றுநீ அறிந்தாய்"

என்று "காந்தி பஞ்சகத்தில்" பாரதியைப் பாடவைக்கிறது. ஐசன்ஹோவர் - சர்ச்சில் கொலை வழியாம் போர் வழியை முற்ற முற்ற முறியடிக்கும் சக்தி வாய்ந்தது உலக முழுவதிலுமுள்ள கலைஞர்கள், அறிஞர்கள், விஞ்ஞானிகள், மெய்த் தொண்டர்கள் ஆகியவர்களை முன்னிறுத்தி உலக மக்கள் உருவாக்கியுள்ள சமாதான இயக்கம் என்பதை இன்று நாம் கண்கூடாகப் பார்க்கிறோம். இதைத் தீர்க்க தரிசனமிக்க பாரதி அன்றே கண்டான்.

ஆசிய ஒற்றுமை மாதமாக இம்மாதத்தை வெற்றிகரமாகத் தமிழ் மக்கள் முழு மூச்சோடு கொண்டாட பாரதியின் மேற்படிக் கருத்துக்கள் உள்ளத் தெளிவையும் உணர்ச்சி வேகத்தையும் அள்ளி அள்ளி வீசும் என்பதில் இரு கருத்து இருக்க முடியாது.

வாழ்க பாரதி நாமம்!

"ஜீவா"

12 - 9 - 1954

# பாரதியின் பொதுஉடைமை

பாரதிக்கும் பொது உடைமைக்கும், பாரதிக்கும் சோஷலிஸ இயக்கத்திற்கும் ஒட்டு- உறவு என்ன என்பதை எடுத்துக் காட்டுவது இக்கட்டுரையின் நோக்கம். பாரத நாட்டின் சரித்திர வளர்ச்சியில், தமிழகத்தின் வரலாற்றுப் பாதையில், பொது உடைமையைப் பொறுத்த மட்டில் பாரதியின் இடம் எங்கே என்பதை இங்கு விவாதிக்க விரும்புகிறேன்.

பாரதி ஒரு பொது உடைமை-வாதி என்று எடை போட்டுச் சீர்தூக்கிக் காட்ட முடியுமானால், மெய்யான பாரதி அன்பர்கள் ஒவ்வொருவரையும் பொது உடைமைத் திசையில் அனுதாபத்தோடு தமது சிந்தனைத் தேரை ஓட்டச் செய்ய முடியும் என்பது எனது கருத்து. இங்கு நான் பொது உடைமைக் கொள்கை விளக்கத்தில் இறங்கப் போவதில்லை; பாரதி பொது உடைமையை ஏற்றுக் கொண்டானா இல்லையா என்பதையே விளக்கிக் காட்ட விரும்புகிறேன்.

இந்த விளக்கத்தைப் பின்வரும் தலைப்புக்களில் தீட்டப் போகிறேன்:

1. பாரதியின் தனி வாழ்வில் பொது உடைமையின் எதிரொலி எவ்வாறு பாய்கிறது?

2. பொது உடைமைத் திசையில் பாரதியின் கருத் தோட்டத்தில் ஆதிக்கம் செலுத்தியவர் யார் யார்?

3. தத்துவ ரீதியாகப் பாரதி கொடுங்கோன்மையை எவ் வாறு சாடித் தாக்கினன்? விடுதலையை-சுதந்திரத்தை எவ்வாறு பாடி ஊக்கினன்?

4. இவைகளைப் பற்றி நடைமுறை ரீதியாகப் பாரதி எவ்வாறு பாடினன்?

5. வர்க்கப் போராட்டம் பற்றிய பாரதியின் தெள்ளிய கண்ணேட்டம் என்ன?

6. "சுதந்திரம்", "நீதி", "குற்றம்", "தொழில்", "சொத்து" ஆகிய சொற்களின் உண்மையான பொருளைக் காண்பதில் பாரதியின் கூரிய மதி நலம் எத்தகையது?

7. சமுதாயக் கேடுகளுக்கு மாற்று மருந்து காண்பதில் பாரதியின் காரிய சாத்தியமான இயல்பு என்ன?

8. சமுதாயப் புது அமைப்பு தவிர்க்க முடியாதது, வரப் போவது என்ற உண்மை பற்றிய அவனுடைய தெளி வான காட்சி என்ன?

9. "இனி ஒரு விதி செய்வோம்" என்று தானே பாடுவது போல் எதிர்காலத்தைப் பற்றிப் பாரதி காட்டும் படம் யாது?

10. பாரதியின் இலக்கியத்தில், எழுத்துக்களில், பொது உடைமைக் கருத்துக்கள் காணப்படும் குறிப்புகள் எவை?

## பாரதியின் தனித்தன்மை

1905-ம் ஆண்டில் ஐரோப்பாவிலும் ஆசியாவிலும் வெடித்த புரட்சிகளின் முன்னும் பின்னுமாகப் பாரதி, தீவிர தேசீயவாதி பாரதியாக உருவானன். கவித்துவ, வரலாற்று

வல்ல நுண்மான் நுழைபுலத்தோடு மேற்படி புரட்சி நிகழ்ச்சிகளின் செம்பொருளை அழுத்தந்திருத்தமாக உணர்ந்தான்.

பாரதியின் அறிவியல் - முன்னோடிகள், சங்க காலச் சான்றோரும், உபநிடத முனிவர்களும், வள்ளுவனும், இளங்கோவும், கம்பனும், மாஜினியும், ஷெல்லியும், நிவேதிதா தேவியும், திலகரும் லெனினும் ஆவர். பாரதி, சுயமாக வலை பின்னிய சிலந்திப் பூச்சி ஒன்பதைவிட, கோடிக்கணக்கான பூக்களிலிருந்து தேனைத் திரட்டிய தேனீ என்றே கூறல் வேண்டும். பாரதி ஒரு கூட்டு மேதை. (Synthetic genius) பொருத்தமாகக் குருநாதர்களைப் பொறுக்கி எடுத்த புனிதன்.

''கோத்த பொய்வேதங்களும் - மதக்
கொலைகளும் அரசர்தம் கூத்துக்களும்
மூத்தவர் பொய் நடையும் - இள
மூடர்தம் கவலையும்....'' (கண்ணன் என் தாய்)

மண்டிக் கிடந்த காலம் இந்த நூற்றாண்டின் ஆரம்ப காலம்.

''நெஞ்சு பொறுக்குதில்லையே - இந்த
நிலைகெட்ட மனிதரை நினைந்துவிட்டால்''

என்று நெஞ்சுருகிப் பரிதாபமாய்ப் பாடும்படி மக்கள் நரக வாதனைப் பட்டு அன்று சீரழிந்து கொண்டிருந்தார்கள்.

இந்த நிலையைப் பாரதி கண்டான்.

''நமக்குத் தொழில் கவிதை நாட்டிற் குழைத்தல்
இமைப் பொழுதும் சோராதிருத்தல்''

என்று பாடினான் பாரதி. தீவிர அரசியலில் வெகுவேகமாகக் குதித்தான். ஆயினும் அவன் ஒருக்காலும் கவிதைகள் யாப்பதையும், பாடல்கள் பாடுவதையும் நிறுத்தினான் இல்லை.

பாரதியின் தனித்தன்மை அவனுடைய ஒவ்வொரு பாடலிலும் 'ஜம்'மென்று முத்திரையிட்டுப் பொலிகிறது. முற்றும் தன்னுணர்வின்றியோ அல்லது ஒரு மேதையின் தன்னடக்கமான சுய உணர்வுடனே, தன்னைப் பற்றிய சொற்சித்திரங்களை எத்தனை எத்தனையோ அடிகளில், வரிகளில் பாடியுள்ளான்.

"எப்பதம் வாய்த்திடுமேனும் - நம்மில்
யாவர்க்கும் அந்தநிலை பொதுவாகும்
முப்பது கோடியும் வாழ்வோம் - வீழில்
முப்பது கோடி முழுமையும் வீழ்வோம் - "

(வந்தேமாதரம்)

"இன்னல் வந்துற்றிடும் போததற்கஞ்சோம்
ஏழையராகி இனி மண்ணில் துஞ்சோம்
தன்னலம் பேணி இழி தொழில் புரியோம்
தாய்த்திரு நாடெனில் இனிக்கையை விரியோம்"

(எங்கள் நாடு)

இவ்வாறு விடுதலை முழக்கம் செய்த படையெழுச்சியின் தளபதியாகக் காட்சி அளித்தான் பாரதி.

"வெற்றிகூறுமின்! வெண்சங்கூதுமின்!
கற்றவராலே உலகு காப்புற்ற
துற்றதிங் கிந்நாள்!" (பாரத மாதா நவரத்னமாலை)

பாரதி இவ்வாறு கற்றவருள் ஒருவனாக விளங்கினான்.

"இன்னாத பிறர்க்கெண்ணான்; பாரதநாட்டிற்
கிரங்கி இதயநைவான்;
ஒன்றுரென் றெவருமிலான் உலகனைத்து
மோருயிரென்றுணர்ந்த ஞானி"

(பூபேந்திர விஜயம்)

இத்தகைய சர்வதேசீயத்தைத் தழுவிய தேசீய ஞானி பாரதி.

''நாமிருக்கும் நாடு நமதென்பதறிந்தோம் — இது
நமக்கே உரிமையா மென்பதறிந்தோம்''

(சுதந்திரப்பள்ளு)

இந்த அடிகளில் பாரதி, ஆனந்த சுதந்திரம் எவ்வாறு மலர வேண்டுமென்ற தனது உள்ளக்கிடக்கையை வெளியிடுகிறான்.

''இந்திரனுர் உலகினிலே நல்லின்பம்
இருக்குதென்பார்; அதனையிங்கே கொண்டெய்தி
மந்திரம்போல் வேண்டுமடா சொல்லின்பம்-நல்ல
மதமுறவே அமுதநிலை கண்டெய்தி...''

(சக்திக்கூத்து)

''ஜெயமுண்டு பயமில்லை மனமே - இந்த
ஜன்மத்திலே விடுதலையுண்டு நிலையுண்டு''

(ஜீவன் முக்தி)

இவ்வாறு பாரதி தனது காட்சியில் பட்ட வாழ்க்கைப் படக் கூறுகளை, தனது கண்ணேட்ட வீச்சுகளைக் காட்டுகிறான்.

அப்பழுக்கற்ற தேச பக்தன், புனிதமான மனிதன், பயன்படு கவிஞன், தத்துவ ஞானி, தீர்க்கதரிசி—இவ்வாறு பாரதி திகழ்ந்தான். இத்தகைய சிறந்த அம்சங்களோடு, பாரதியின் ஆணித்தரமான அரசியல் கொள்கையையும் இணைத்து நோக்கின், அவனுடைய அசாதாரணமான அரசியல் தீர்க்கதரிசனம் புலனுகும். இதோடு விஞ்ஞான உண்மைகளில் அவனுக்கிருந்த பற்றுக்கோட்டையும், அவனிடம் ஏற்பட்டிருந்த சரித்திரக் கண்ணேட்டத்தையும் துல்லியமாகக் கணித்துப் பார்த்தால், பாரதியின் சிறப்பு இன்னும் சுடர்விட்டு ஒளிரக் காணலாம்.

''மன்னரையும் பொய்ஞ்ஞான மதக் குரவர் தங்களையும்
மதிக்கலாதேன்''

என்று 1906-ம் ஆண்டிலேயே பாடி விட்டான் பாரதி.

''பாட்டுத்திறத்தாலே — இவ்வையத்தைப்
பாலித்திடவேண்டும்''

''இது எனது கோரிக்கை, இந்தக் கோரிக்கையை நிறை வேற்று'' என்று பராசக்தியிடம் வரம் கேட்கிறான். இந்த வரம் கிடைக்கும் என்ற சர்வ நிச்சயத்தால்தான்,

''இல்லையென்ற சொல்லை — உலகில்
இல்லையாக வைப்பேன்''

என்று சங்கநாதம் செய்கிறான்.

''இந்தியா'' என்ற வார இதழைப், பாரதி 1906-ம் ஆண்டு ஏப்ரல் அல்லது மே மாதத்தில் சென்னையில் ஆரம் பித்தான். சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் அதனுடைய லட்சியம். தனிப் பிரதி விலை அணா ஒன்று. பாரதி அதற்கு ஆண்டுச் சந்தா நிர்ணயித்த வழியே தனிப் பட்டது.

அது பின்வருமாறு:

நமது பத்திரிகையின் சந்தா விவரம்:

| | ரூ. | அ. | பை |
|---|---|---|---|
| எல்லா கவர்மெண்டாருக்கும் | 50 | 0 | 0 |
| ஜமீன்தார்கள், ராஜாக்கள் முதலியவர்களுக்கு | 30 | 0 | 0 |
| மாதம் ரூ. 200க்கு மேற்பட்ட வருமானம் உடையவர்களுக்கு | 15 | 0 | 0 |
| மற்றவர்களுக்கு | 3 | 0 | 0 |

இங்கு பாரதி தனது 'கருவில் அமைந்த திருவை'— நவயுகக் கொள்கையை வெட்ட வெளிச்சமாக்குகிறான்.

''சரித்திரத்தேர்ச்சிகொள்'' ''தொன்மைக்கஞ்சேல்'' ''புதியன விரும்பு'' ''வையத் தலைமை கொள்'' (புதிய ஆத்திசூடி) என்ற கொள்கையாளன் பாரதி. படிப்படி மாறுதலையும், பரிணாமத்தின் பாய்ச்சலான புரட்சி மாறுதலையும் வரவேற்ற சரித்திர விஞ்ஞானி பாரதி; பரம்பரையை ஒட்டியும், சூழ்நிலையை ஒட்டியும், தனிமனிதனும் சமுதாயமும் வளருவர் என்ற திட்டவட்டமான கருத்தையுடையவன் பாரதி.

புரட்சிப் புலவனும், சோஷலிசக் கருத்துப் புலவனுமான ஆங்கில நல்லிசைப் புலவன் ஷெல்லியின் பேரால், ''ஷெல்லியன் கில்டு'' என்ற ஒரு மன்றத்தை நிறுவியவன் பாரதி.

1917 -ம் ஆண்டில் ரஷியாவில் நவம்பர் புரட்சி நடந்ததும், அதை ''யுகப் புரட்சி'' என்று நிர்ணயித்து, வரவேற்று ஆனந்தக் கூத்தாடினவன் பாரதி.

1921 -ம் ஆண்டில் தான் மறைவதற்குச் சில நாட்களுக்கு முன், வரப்போகும் பாரத சமுதாயத்தைத் தன் தீர்க்க தரிசனத்தில் கண்டு,

> ''முப்பது கோடி ஜனங்களின் சங்க
> முழுமைக்கும் பொதுஉடைமை
> ஒப்பிலாத சமுதாயம்
> உலகத்துக்கொரு புதுமை''

என்று ஆவேசப் பெருக்கோடு வாழ்த்தினவன் பாரதி.

''புரட்சி'' ''பொதுஉடைமை'' என்ற இரண்டு கருத்துச் செல்வங்களைப் பாரத நாட்டிலே முதன் முதலாக ஆரத் தழுவித் தமிழுக்கும் தமிழ் மக்களுக்கும் வரையாது வழங்கிய வள்ளல் பாரதி.

இந்தத் தொடர் கட்டுரை முழுவதிலும் பாரதியின் அரசியல், சமுதாய, பொருளாதாரச் சிந்தனை ஓட்டத்தையே குறிப்பிடுகின்றேன்.

இங்கு மீண்டும் ஒரு சொல். பாரதி காலத்தில், தேசிய, சர்வ தேசீயத் துறைகளில் சிந்தனையை ஓட்டிய புலவன் அவன் ஒருவனே ஒருவன். சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் என்ற ஜனயுக மகாகோஷங்களை கவிதைத் தேனில் குழைத்து இசை முழக்கம் செய்த நல்லிசைப் புலவன் அவன் காலத்தில் அவன் ஒருவனே. சமதர்மத் திசையில் தனது தொலை நோக்கும் பார்வையை வீசிய புரட்சிக் கவியரசனும் அவன் ஒருவன்தான்.

'தமிழ்த் தாத்தா' மகாமகோபாத்யாய சாமிநாத அய்யரும், 'அறிவுக்கடல்' மறைமலை அடிகளாரும், செந்தமிழ் வல்ல ராகவய்யங்கார்களும், கவி மாரி பொழியும் கந்தசாமிக் கவிராயர்களும், ஏனைய பெரும் புலவர்களும் பாரதியின் காலத்தில் பேர்போக வாழத்தான் செய்தார்கள். ஆனால், அவர்களில் எந்தப் புலவர்களும் இந்த ஜனநாயக, சமதர்மத் திசை வழியில் ஓர் அடிகூட எடுத்து வைத்தாரில்லை. நுண்ணிய தமிழறிவோடு சமயப் பற்றிலும் ராஜ பக்தியிலும் அவர்கள் திளைத்த காலம் அது. அன்று மேனாட்டு நவீனக் கருத்துக்களையும் நம் நாட்டுப் பண்பாட்டையும் இணைத்து, ஒட்டு மாங்கனி போல, அரும் பெரும் சுவைபட மக்கள் இலக்கியம் தந்த பெருமை பாரதியின் தனிப் பெருமை.

நான் ஏற்கனவே கூறியபடி, பாரதி தனது அறிவியல் முன்னோடிகளெனத் தேர்ந்தெடுத்தவர்கள் பலர். அலசிப் பார்க்கும்பொழுது, பாரதியின் நாட்டன்பை, அரசியல், சமுதாய உணர்வை வளப்படுத்தி வலுப்படுத்தியவர்கள் ஒரு சிலர். அவர்களில் நிவேதிதாதேவி, ரவீந்திரநாத

தாகூர் ஆகியோர் குறிப்பிடத்தக்கவர். ஜாரின் வீழ்ச்சியும் சோவியத் மலர்ச்சியும், பாரதிக்குப் புதிய சமுதாய ஒளி நல்கிய மகத்தான நிகழ்ச்சிகள்.

பாரதியின் முதல் குருமணி நிவேதிதாதேவியார். முதன் முதலில் 1908-ல் தீட்டிய "ஸ்வதேச கீதங்கள்" என்ற நூலையும் 1909-ல் தீட்டிய "ஜன்ம பூமி" என்ற நூலையும் மாதாவின் மெய்த் தொண்டினைச் சொல்லாம லுணர்த்திய குருமணியும், விவேகானந்தப் பெருஞ்சோதி யின் தர்மபுத்திரியுமான நிவேதிதா அம்மையாருக்கே அர்ப் பணிக்கிறன் பாரதி. தனது ஞானகுருவைப் பின் வருமாறு பாடித் துதிக்கிறன்;

"அருளுக்கு நிவேதனமாய் அன்பினுக்கோர்
கோயிலாய் அடியேன் நெஞ்சில்
இருளுக்கு ஞாயிரு யெமதுயர் நா
டாம்பயிர்க்கு மழையாயிங்கு
பொருளுக்கு வழியறியா வறிஞர்க்குப்
பெரும் பொருளாய்ப் புன்மைத்தாதச்
சுருளுக்கு நெருப்பாகி விளங்கியதால்
நிவேதிதையைத் தொழுது நிற்பேன்"

"நெஞ்சில் இருளுக்கு ஞாயிறு" "புன்மைத் தாதச் சுருளுக்கு நெருப்பு" என்று பாரதி ஏற்றிப் போற்றும் தேவியார்தான், அவனது தேச பக்த ஆவேசத்திற்குக் காரண பூதமென்று தெள்ளிதில் புலனாகிறது.

அன்னையாரின் இந்தச் செல்வாக்கு, பாரதிக்குப் பெண் ணினம் பற்றிய கண்ணோட்டத்தை ஒப்புயர்வற்ற வகையில் வெகுதூரம் வளர்த்திருக்கிறது. எனவே தமிழக, பாரதப் பண்பாட்டோடு, புது உலகக் கருத்தோட்டத்தைப் பொருத்தி, புதுமைப் பெண்ணைப் படைத்தருளுகிறன். ஆண்களோடு பெண்கள் 'சரி, நிகர், சமானம் என்ற ஜனநாயகக் கோட்பாட்டை உயர்த்திப் பிடிக்கிறன்,

சமுதாயத்தில் செம்பாதி பெண் பகுதி. எனவே புதிய சமுதாயம் பெண் விடுதலை பெற்ற சமுதாயம். அதை நாம் கண்டு களிக்கப் புதுமைப் பெண்ணை நம் முன் கொண்டு வந்து நிறுத்துகிறான். அவளைக் கொண்டே அவள் கோரிக்கையைக் கோஷிக்கச் செய்கிறான். தான் அந்தக் கோரிக்கையை உச்சி மேல் வைத்து மெச்சிப் பாராட்டு கிறான்.

பாராட்டும் நயத்தைப் பாருங்கள்!

"மாதர்க்குண்டு சுதந்திரம் என்றுநின
வண்மலர்த்திரு வாயின் மொழிந்த சொல்
நாதந்தானது நாரதன் வீணையோ?
நம்பிரான் கண்ணன் வேய்ங்குழல் இன்பமோ?
வேதம் பொன்னுருக் கன்னிகையாகியே
மேன்மை செய்தெமைக் காத்திடச் செல்வதோ?
சாதல் மூத்தல் கெடுக்கும் அமிழ்தமோ?
தையல் வாழ்க பல்லாண்டு பல்லாண்டிங்கே"

புதுமைப் பெண், தனது விடுதலையையும், சமநிலையை யும் ஆணித்தரமாக நியாயப்படுத்தும் அற்புதத்தைக் கேளுங்கள்!

"அறிவு கொண்ட மனித உயிர்களை
அடிமையாக்க முயல்பவர் பித்தராம்
ஆணும் பெண்ணும் நிகரெனக் கொள்வதால்
அறிவிலோங்கி இவ்வையம் தழைக்குமாம்"

புதுமைப் பெண்ணின் திட்டங்களைக் கேளுங்கள்!

"உலக வாழ்க்கையின் நுட்பங்கள் தேரவும்
ஓதுபற்பல நூல்வகை கற்கவும்
இலகுசீருடை நாற்றிசை நாடுகள்
யாவுஞ்சென்று புதுமை கொணர்ந்திங்கே

"திலகவாணுதலார் நாங்கள் பாரத
தேசமோங்க உழைத்திடல் வேண்டுமாம்;
விலகி வீட்டிலோர் பொந்தில் வளர்வதை
வீரப்பெண்கள் விரைவினில் மூழிப்பாராம்!

சாத்திரங்கள் பலபல கற்பராம்;
சவுரியங்கள் பலபல செய்வராம்;
மூத்த பொய்மைகள் யாவும் அழிப்பராம்;
மூடக்கட்டுகள் யாவும் தகர்ப்பராம்;
காத்துமானிடர் செய்கை யனைத்தையும்
கடவுளர்க் கினிதாகச் சமைப்பராம்;
ஏத்தி ஆண்மக்கள் போற்றிடவாழ்வராம்"

என்று கூறி, இள நங்கையின் எண்ணங்களைக் கேட்டு மெய் சிலிர்க்கிருன் பாரதி.

முடிவாக இந்த நவயுகப் பெண்ணைப் பற்றிய அவன் மதிப்பீட்டைப் பாருங்கள்!

"மாற்றி வையம் புதுமையுறச் செய்து
மனிதர்தம்மை அமரர்களாக்கவே
ஆற்றல்கொண்ட பராசக்தியன்னை நல்
அருளினலொரு கன்னிகையாகியே
தேற்றி உண்மைகள்கூறிட வந்திட்டாள்
செல்வம்யாவினும் மேற்செல்வம் எய்திளேம்"

இத்தகைய புதுமைப் பெண்ணைக் கண்ட பாரதி "பெண்மை வாழ்க" என்று ஆனந்தக் கூத்தாடுகிருன்:-

"பெண்ணறத்தினை ஆண்மக்கள் வீரந்தான்
பேணுமாயிற் பிறகொரு தாழ்வில்லை

கண்ணைக்காக்கும் இரண்டிமைபோலவே
காதலின்பத்தைக் காத்திடுவோமடா''
''உயிரினைக்காக்கும், உயிரினைச்சேர்ந்திடும்
உயிரினுக்குயிரா யின்பமாகிடும்
உயிரினும் இந்தப் பெண்மை இனிதடா!
ஊதுகொம்புகள், ஆடுகளி கொண்டே!''

---

(இந்தக் கட்டுரைத் தொடர் முற்றுப்பெறவில்லை.)

# பாரதி சில மதிப்பீடுகள்

'புதியன விரும்பு', 'பெரிதினும் பெரிது கேள்'—இது பாரதி வளரும் தமிழகத்திற்குக் காட்டிய வழி.

பாரதி வெறும் வழி காட்டியல்ல; வாழ்ந்து வழி காட்டியவன். அவன் தனது சாதனையை,

> ''சுவை புதிது, பொருள் புதிது,
> வளம் புதிது, சொற் புதிது, சோதிமிக்க
> நவ கவிதை எந்நாளும்
> அழியாத மாகவிதை''

என்று நெஞ்சு நிமிர்த்திப் பெருமைப்பட முழக்கினன். ''மந்திரம் போல் வேண்டுமடா சொல்லின்பம்'' என்றான். ''பாட்டுத் திறத்தாலே, இவ்வையத்தைப் பாலித்திட வேண்டும்'' என்றான். ''நானில மாந்தருக்கெல்லாம் நன்று, ஒன்றி அன்பில் ஓங்குதல்'' என்றான். ''வேதம் புதுமை செய்!'' ''வையத் தலைமை கொள்!'' என்று அவன் நமக்குக் கம்பீரமாக ஆணையிடும்பொழுது, புதுமையினும் புதுமையையே காட்டுகிறான்.

### கூட்டு மேதை

இந்தப் புது உலகச் சிற்பி, நவயுகக் கலைஞன், வள்ளுவனுக்கும் கீதாசாரியனுக்கும் கூட்டு மேதா விலாசத்தில் (Synthetic genius) தெள்ளிய வாரிசாக விளங்குகிறான்

என்பதோடல்லாமல், புதிய ஜனநாயகத்தின் ஒப்பற்ற குழந்தையாகவும் சுடர் விடுகிறான். ஷெல்லி, வால்ட் விட்மன், மாயக்காவ்ஸ்கி, தாகூர், இக்பால் ஆகிய கவிப் பேரரசர்கள் தரத்தில், மாற்றுக் குறையாமல், வரிசை தப்பாமல், அணி வகுத்து நிற்கிறான். தனது சிறப்பியல்பைக் காட்டுவதில் எவருக்கும் இளைத்தானில்லை. அவர்களைப் போல் பாரதியும் காலத்திலும் வாழ்ந்தான்; காலத்தைத் தாண்டியும் வாழ்கிறான்.

பழைமையின் சிறந்த கூறுகளைத் தன் மயப்படுத்தினான் என்பது மெய். ஆனால் பாரதியின் ஆத்ம மையம் புதிய மையம் புதிய முறைதான். தன் காலத்தில் தன்னேரிலாத பிரதிநிதி முறைதான். முக்காலத்தையும் உயிர்த்துள்ள இணைக்கும் உலகு தழுவிய கூட்டு முறை, பாரதி முறை.

உண்மை ஒளி

உள்ளத்தின் உண்மை ஒளியால் வாக்கினில் ஒளி உண்டாக்கியவன் பாரதி. நாடினான் இடையறாத முயற்சி முழுமையை நாடி, தனது இரு கரங்களையும் விரித்துத் தாவித் தாவிச் செல்ல, உண்மையை நாடினான். இயற்கை வாழ்வு, சமுதாய வாழ்வு, மன வாழ்வு என்ற முக்கூறு கொண்ட வாழ்க்கை நூலைப் பாரதி தனக்கே உரிய முறையில் படித்தான். அதன் விளைவாக, கலை - இலக்கியத் தத்துவங்களை - கோட்பாடுகளைத் தனக்கு உகந்த முறையில் புதுமை செய்து கொண்டான். உருவத்திலும் உள்ளடக்கத்திலும் தமிழ் இலக்கியத்தில் பாரதி ரகம், புது ரகம் - தனி ரகம். காலம் பெருமைப்பட படையல்களை அருளினான்.

பாஞ்சாலி சபதம், குயில் பாட்டு, கண்ணன் பாட்டு ஆகியவை மட்டுமல்ல. தனிப் பாடல்களும் பக்திப் பாடல்களும் புதிய சகாப்தத்தின் புது முத்திரை தாங்கிப் பிறந்திருக்கின்றன. பாரதி தமிழகத்தில், புதிய ஜனநாயகக் கலை - இலக்

கிய வாசற்படியில் நின்று கொண்டு, "வீரர் என்பார்கட் கெல்லாம் வீர வீரனாக"ப் போராடினான். சிந்தனையை ஒட்டிய திலும், செயல்பட்டதிலும் துணிச்சலுக்கும் அஞ்சா நெஞ் சத்திற்கும் எடுத்துக்காட்டாய் நின்றான்

தன்னை வெளியிடுவதற்கும், உலகத்தைப் பற்றிய தனது மனப்பான்மையை வெளியிடுவதற்கும் மாத்திரமல்ல, இலக்கியம் பாரதிக்குத் தேவைப்பட்டது. கலையின் சேனையர் குறிக்கோளான மனிதப் பெருங் கடலுக்கு ஊழியம் புரிவதற்கும் இலக்கியம் அவனுக்குத் தேவைப் பட்டது.

நடவடிக்கைகள் எல்லாவற்றிலும் கலைத்துறை நட வடிக்கைதான் அக நோக்கோடு மனிதனுக்கு ஆக அதிக மகிழ்ச்சியை ஊட்டுவதாக இருக்கிறது. ஆயினும் வெளி உலகைப் புறநோக்கோடு புரிந்து கொள்ள முயல்வதுதான் கலையின் இயல்பான தன்மை. 19-ம் நூற்றாண்டிலும், இந்த நூற்றாண்டின் தொடக்கத்திலும், எதார்த்தச் சூழ்நிலையை உண்மையாகச் சித்தரித்துக் காட்டுவதுதான் அழகுணர்ச்சி யின் முதற் பெருங்கடமை என்று கருதப்பட்டது.

எதார்த்தச் சூழ்நிலை கலை வடிவம் தாங்குகிற பொழுது, இருக்கிற உலகம் ஒரு புதிய உலகம் படைக்கப்பட்டது போலக் காட்சி அளிக்கிறது. இத்தகைய கலை எதார்த்த வாதச் செழு நிலத்தில்தான் வளம் பெற வளர்கிறது. எதார்த்தவாதக் கலை, வாழ்வின் சிக்கல்-சிடுக்கல்களையும், பல்லலங்காரப் பண்புகளையும், பன்னிற ஓட்டங்களையும் கை தேர்ந்த விதத்தில் சித்திரித்துக் காட்டும் திறன் படைத்ததாகத் திகழ்கிறது. இந்தக் கலையில் வாழ்வின் உண்மையை ஓவியம் தீட்டுவதில் காட்டும் நேர்மையே அழகு விளக்கத்தின் சிறந்த அளவுகோலாகக் கருதப் படுகிறது.

பாரதி பாடுகிறான்: 'பாஞ்சாலி சபத'த்தில் ஓரிடத்தில்,

''தெளிவுறவே அறிந்திடுதல், தெளிவுதர
மொழிந்திடுதல்! சிந்திப்பார்க்கே
களிவளர உள்ளத்தில் ஆனந்தக் கனவுபல
காட்டல்; கண்ணீர்த்
துளிவர உள்ளுருக்குதல் இங்கிவையெல்லாம்
நீயருளும் தொழில்கள் அன்றோ?
ஒளிவளரும் தமிழ்வாணீ! அடியனேற்
கிவையனைத்தும் உதவுவாயே''

பாரதி கலைஞன் வாழ்வைத் தெளிவாகப் புரிந்து கொள்ள வேண்டும் என்கிறான். இணக்கமாகவும் துல்லியமாகவும் வெளியிட வேண்டும் என்கிறான். பல்லலங்காரப் பண்புகளால், ஆனந்தக் கனவுகள் காட்டி மகிழ்விக்கவும் வேண்டும்; உள்ளத்தை உருக்கவும் வேண்டும் என்கிறான். வரங் கேட்பதிலேயே, நல்லியற் கவிஞன் - கலைஞனின் இலக்கணம் கூறிவிடுகிறான்.

நினைவாற்றல் பெருக்கம்

உணர்ச்சிப் பெருங்கடலும் எழுத்துக் கலைஞனுமான ஸ்டீபான்ஸுவீக், மாக்சிம் கார்க்கியைப் பற்றி முப்பது ஆண்டுகளுக்கு முன் கூறியதை இங்கு நினைவூட்ட விரும்புகிறேன்.

''........கார்க்கியின் நினைவு ஆற்றல் நமது சகாப்தத்தின் உண்மையான சில அற்புதங்களில் ஒன்று. அவனுடைய காட்சியில் கண்ட தெளிவுக்கும் துல்லியத்திற்கும் புதிய கலையில் தூராதொலையில்கூட ஒப்புவமை கூற முடியாது. அந்தக் காட்சியின் ஒளியை எந்தப் போலிப் பகட்டொளியாலும் மங்கடிக்க முடியாது. அந்தத் தெக்கத் தெளிவான கண்ணாடியில், எந்தப் பொய்யென்ற நீர்த்திவலை

களும் ஒட்டிக்கொள்ள முடியாது. கார்க்கி திரித்த சிதைத்த சித்திரங்களை வரைகிறதில்லை. அவன் வெளிச்சத்தை அதிகப் பிரகாசமாக்குவதோ, இருட்டை அதிக அடர்த்தி யாக்குவதோ கிடையாது. கார்க்கி தெளிவாக உண்மை யையே மறுக்க முடியாத உண்மையையே பார்க் கிருன். நேர் நிகரற்ற தெளிவோடேயே பார்க்கிருன். அவனுடைய நேர்மையான கறைப்படுத்த முடியாத கண்கள் - ஆகச் சிறந்த உண்மையில், நவயுகக் கலையின் ஆகத் துல்லியமான கருவியில் நிலைத்து நிற்கிறது - அவன் கண் எதையும் ஒதுக்காது, எதையும் திரிக்காது, எதையும் மாற்ருது - தூய்மையான, உண்மையான எதார்த்தமே அதில் எதிர் ஒளிவிடும்.''

கார்க்கிக்குச் சூட்டும் இந்தப் புகழ்மாலையில் விடாமல் வற்புறுத்தப்படும் கருத்து என்ன? கார்க்கியின் எழுத்துப் படையல்களில் காணக் கிடக்கும் ''நிகரற்ற உண்மையும் இணையற்ற தெளிவும்'' ஆகும்.

தமிழ்நாட்டுக் கார்க்கியான பாரதிக்கும் இந்தப் புகழ் மாலையை நாம் பெருமையுடன் சூட்டி மகிழ முடியும். அவ னுடைய இலக்கியம் முழுவதிலும் ''நிகரற்ற உண்மையை யும் இணையற்ற தெளிவையும்'' பொதிந்து தரும் நன் முயற்சியின் அடிச்சுவடுகளைக் காணலாம்.

எதிர்கால நம்பிக்கை

எதிர்காலத்தில் நம்பிக்கை இல்லாவிட்டால் கலை மாண்டு மடிந்து போகும். காற்றும், நீரும், சூரிய ஒளியும் தேவைப்படுவதுபோல், எதிர்கால நம்பிக்கை கலைஞனுக்குத் தேவை. மாபெரும் கலைஞரும், சான்றோருமான டால்ஸ்டாய் தாம் கொள்கைப் போராட்டத்தில் ஈடுபட்டிருந்த காலத்தில் பின்வருமாறு எழுதினர்:

''உலகில் இருப்பதை மட்டும் சித்தரித்தால் போதாது. நாம் வரையும் வாழ்க்கைச் சித்திரம் உண்மை

யான சித்திரமாக இருக்க நாம் விரும்பினால், எப்படி இருக்கிறதென்று எழுதினால் போதாது; எப்படி இருக்க வேண்டும் என்றும் எழுதியாக வேண்டும்'' என்று. கொள்கை உறுதியோடும் உணர்ச்சிப் பெருக்கோடும் டால்ஸ்டாய் என்ன சொன்னார் தெரியுமா? எப்படி யிருக்க வேண்டும் என்று நாம் புரிந்துகொள்ளா விட்டால் உண்மையை வெளியிடுவது முடியாத காரியம் என்றார். கலைக்கு இலட்சியம் இருக்க வேண்டும் என்று இறுதி வரையில் போராடினார். "எழுத்துக் கலைஞனுக்கு எதிர்காலத்தில் நம்பிக்கையில்லா விட்டால், நிகழ் காலத்தை அவனால் மதிப்பீடு செய்ய முடியாது'' என்பது டால்ஸ்டாயின் மணிமொழி.

> ''இந்த ஜென்மத்திலே
> விடுதலையுண்டு நிலையுண்டு''
> ''நமக்குத் தொழில் கவிதை
> நாட்டுக் குழைத்தல்''
> ''எல்லாரும் அமர நிலை
> எய்தும் நன்முறையை
> இந்தியா உலகிற்கு அளிக்கும்''
> ''தெள்ளுற்ற தமிழமுதின்
> சுவை கண்டார் இங்கு
> அமரர் சிறப்புக் கண்டார்''

இந்தக் கருத்துக்களில் உலகப் பெருங் கலைஞர்களின் எதிர்கால நம்பிக்கைக்குப் பாரதி குரல் கொடுப்பது கேட்கிறதல்லவா!

> ''பொய்க்கும் கலியை நான் கொன்று
> பூலோகத்தார் கண் முன்பே
> மெய்க்கும் கிருதயுகத்தினையே
> கொணர்வேன் தெய்வ விதி இஃதே''

என்று பாரதி 'விநாயகர் நான்மணிமாலை'யில் பாடினான். பின்னர் ரஷ்யாவில் ஜார் வீழ்ச்சி ஏற்பட்டதும்,

"இடிபட்ட சுவர்போலே
கலி விழுந்தான்"

என்று பறையறைந்தான். இது மட்டுமா! "கிருதயுகம் எழுக" என்று முழங்கினான். எதிர்காலத்தில் பாரதிக்கு இருந்த நம்பிக்கைக்கு எல்லையில்லை.

ஒரு சிறந்த கலைஞன், சென்ற காலத்தை விளக்கிக் கூறவேண்டும்; நிகழ்காலத்தைப் புரிந்து கொள்ள வேண்டும்; எதிர்காலத்தை ஊடுருவிப் பார்க்க வேண்டும். நிகழ்காலத்தைப் புரிந்து கொள்ள வேண்டுமானால் காட்சித் தெளிவும், சங்கிலித் தொடர் போன்ற சரித்திர பூர்வ வளர்ச்சியும் கலைஞனுக்கு இருக்க வேண்டும். சென்ற காலம், நிகழ்காலத்திலுள்ள பல முரண்பாடுகளைப் புரிந்து கொள்ளவும், இதன் உள் சாரத்தை அறிந்து கொள்ளவும் உதவும். இன்றைய வாழ்வுக்குத் தீர்வு காண, எதிர் காலத்தை ஊடுருவிப் பார்க்கிற கலைஞனுக்குத்தான் முடியும்.

பாரதியின் "செந்தமிழ் நாடெனும் போதினிலே" பாட்டு, சென்ற காலத்தைப் பற்றிய அவன் அறிவு விளக்கத்திற்கு எடுத்துக்காட்டு. நிகழ்காலத்தைப் பற்றிய பாரதி அறிவு "நெஞ்சு பொறுக்குதில்லையே" பாட்டில் முரசடிக்கிறது - வருகின்ற பாரதத்தில் அவனுடைய எதிர் காலக் காட்சி சுடர்விடுகிறது.

"ஒற்றுமைக்குள் உய்யவே
ஒரு பெரும் செயல் செய்வாய் வா வா வா."

1959

# அழியாத மகா கவிதை

பாரதி எழுதிய கவிதைகள் பலப்பல; பற்பல. தேசீயப் பாடல்கள், பக்திப் பாடல்கள், வேதாந்தப் பாடல்கள், பாரதி அறுபத்தாறு, சுய சரிதம், முப்பெரும் பாடல்கள், தனிப்பாடல்கள், வசன கவிதை முதலியன.

முப்பெரும் பாடல்கள்

பாஞ்சாலி சபதம், கண்ணன் பாட்டு, குயில் பாட்டு ஆகியவை பாரதியின் முப்பெரும் பாடல்கள். இவை பாரதியின் மிகச் சிறந்த பாடல்கள் என்றும், நிலையான பாடல்கள் என்றும் பழைமை விரும்பிகளும் ஒப்புக்கொள்கிருர்கள். அப்படி ஆயின், புதுமைப் பித்தர்களைப் பற்றிக் கேட்கவும் வேண்டுமா?

பாஞ்சாலி சபதம்

கம்பனுக்குப் பின் இப்படி ஒரு காப்பியம் தமிழில் தோன்றவில்லை எனக் கூறத் துணிகிறேன். பரஞ்சோதி முனிவரின் திருவிளையாடற் புராணம், வில்லிப் புத்தூர் ஆழ்வாரின் பாரதம் போன்ற செந்தமிழ்ச் செல்வங்களை, இலக்கியக் கண்ணோடு, கணக்கிலெடுத்துக்கொண்டுதான், பாஞ்சாலி சபதத்திற்கு நிகரில்லை என்று கூறுகிறேன்.

வியாச முனிவனின் பாரதக் கதையைப் பாஞ்சாலி சபதத்தில் பின்பற்றுவதாகவே பாரதி கூறுகிருன். ஆனல்

பாரதி கதையை நடத்திச் செல்லும் பாணி, புதுச்சுவை மிக்கதாக இருக்கிறது. காப்பியம் பாட "விருத்தம் எனும் ஒண்பா''வே ஒத்தது என்பார்கள் இலக்கண வல்லு நர்கள். ஆனால் பாரதி, பா இனத்தில் சேராத நொண்டிச் சிந்தைக் கைக்கொண்டு, வில்லியின் 'பாரதத்தை' விட ஆற்றல் மிகப் 'பாஞ்சாலி சபத'த்தைப் பாடியிருக்கிறான். சர்வ சாதாரண மக்கள் பழகும் நொண்டிச் சிந்தைக்கொண்டு காப்பியம் பாடியிருக்கிறான். எளிய நடையில் பாடியிருக் கிறான். கவிதைச் சுவையும் நாடகச் சுவையும் போட்டி போடப் பாடியிருக்கிறான். தற்காலப் பண்புக்கேற்ப நூதன முறையில், புதிய கருத்துக்களைப் பரக்கப் பெய்து, ஏறத் தாழ 2,500 வரிகளையுடைய காப்பியமாகப் ''பாஞ்சாலி சபத''த்தைப் பாடியிருக்கிறான்.

நூலின் முன்னுரையில் பாரதி சொல்லியிருக்கும் கருத் துக்களை நன்றாக நினைவில் வைத்துக்கொண்டு ''பாஞ்சாலி சபத''த்தை ஆராய்ந்து பார்க்க வேண்டும். முன்னுரையில் சொல்கிறான்: ''எளிய பதங்கள், எளிய நடை, எளிதில் அறிந்து கொள்ளக் கூடிய சந்தம், இவற்றினையுடைய காவியம் ஒன்று தற்காலத்திலே செய்து தருவோன் நமது தாய்மொழிக்குப் புதிய உயிர் தருவோனாகிறான். ஓரிரண்டு வருஷத்து நூற் பழக்கமுள்ள தமிழ் மக்கள் எல்லோருக்கும் நன்கு பொருள் விளங்கும்படி எழுதுவதுடன், காவியத்துக் குள்ள நயங்கள் குறைவு படாமலும் நடத்தல் வேண்டும்'' என்று.

இந்த இலட்சியத்தை நிறைவேற்றுவதில் பாரதி ''பாஞ்சாலி சபத''த்தில் வெற்றி மேல் வெற்றி சூடியிருக் கிறான் என்பதில் ஐயமில்லை.

மிக எளிய சொற்களைக் கையாடி, எல்லோரும் எளி தாகச் சுவையுடன் படித்து அனுபவிக்கும் முறையில், கற்பனை வளமும், கருத்து வளமும், ஓசையின்ப வளமும்

நிறைந்த கவிதையைப் படைப்பதில் பாரதிக்கு நிகரான புலவன் தமிழ் இலக்கியத்தில் இல்லை என்று திட்டமாகக் கூறலாம். இந்த அம்சத்தில் பாரதி ஒரு புது யுகத்தைத் தமிழ் இலக்கியத்தில் துவக்கியிருக்கிறான். தேவாரம், திருவாசகங்களில் வருகிற பல பாடல்கள், தத்துவராயரின் பாடல்கள், அருணாசலக் கவிராயரின் இராம நாடகப் பாடல்கள், கோபாலகிருஷ்ண பாரதியின் நந்தன் சரித்திரக் கீர்த்தனங்கள், அண்ணாமலை ரெட்டியாரின் காவடிச் சிந்து, பதினெண் சித்தர் பாடல்கள் - ஆகியவற்றை நினைவில் நிறுத்திக் கொண்டும், அவைகளால் பாரதிக்குக் கிடைத்த உணர்ச்சிப் பெருக்கை மறந்துவிடாமலும்தான் பாரதிக்கு நிகரில்லை என்கிறேன்.

வேத வியாசனின் பாரதத்தில் குறிப்பிட்ட சூதாட்ட, துகிலுரிதல் பகுதியைப் படியுங்கள். பின்னர், வில்லியின் "சூதுப் போர் சருக்க"த்தைப் படியுங்கள். அப்பால் பாரதியின் பாஞ்சாலி சபதத்தைப் படியுங்கள். பாரதி அழுத்தம் கொடுக்கும் பொருள் புதிதெனத் தெற்றனப் புலனாகும். நாட்டுப்பற்றையும், பெண் விடுதலையையும் வலியுறுத்தும் கொள்கையை அடிச் சரடாகக் கொண்டே "பாஞ்சாலி சபதம்" உருவாக்கப்பட்டிருக்கிறது. தேச பக்தி, பெண் விடுதலை - ஆகியவை புதிய கொள்கைகள். பழைய நாட்டுப் பற்றுக்கும் பாரதியின் நாட்டுப் பக்திக்கும் வேற்றுமை உண்டு. பழைய புலவர்கள் 'பெண்ணின் பெருமை' பாடியதற்கும் பாரதியின் 'பெண் விடுதலை' முழக்கத்திற்கும், உருவத்திலும் உள்ளுறையிலும் மலைக்கும் மடுவுக்குமுள்ள வேற்றுமையுண்டு.

சூதாட்டத்தில் ஆட்டை, மாட்டை அவை போன்ற பொருள்களைத் தருமன் இழந்தான். அப்பால் நாட்டையும் வைத்து ஆடினான், இழந்தான்.

இந்த இடத்தில் பாரதிக்கு ஆத்திரம் பொங்குகிறது. தானே கதைக்குள் குதித்து ஒரு பாத்திரமாகிவிடுகிருன். கவிஞரின் உணர்ச்சி இங்கு கட்டுக்கடங்காமல் கரையை உடைத்துக்கொண்டு பாய்கிறது.

> "கோயிற் பூசை செய்வோர்-சிலையைக்
>   கொண்டு விற்றல் போலும்
> வாயில் காத்து நிற்போன்-வீட்டை
>   வைத்திழத்தல் போலும்
> ஆயிரங்களான-நீதி
>   அவை உணர்ந்த தருமன்
> தேயம் வைத்திழந்தான்; சீச்சி!
>   சிறியவர் செய்கை செய்தான்!

என்று பாடுகிருன்.

தருமனின் 'தேசத்தை வைத்து இழந்த' செய்கையைச் 'சீச்சி' என்று வெறுத்துக் கூறுகிருன். தருமன் செய்த செய்கை "சிறியரின் செய்கை" என்று கண்டிக்கிருன்.

உடனேயே அவனுடைய சீற்றம், அரசு நடத்துவோர் மேல் பாய்கிறது.

> "நாட்டு மாந்தரெல்லாம்-தம்போல்
>   நரர்களென்று கருதார்
> ஆட்டு மந்தையா மென்று-உலகை
>   அரசர் எண்ணி விட்டார்
> ஓரம் செய்திடாமே-மக்கள்
>   உறுதி கொன்றிடாமே

சோரம் செய்திடாமே-பிறரைத்
துயரில் வீழ்த்தி டாமே
ஊரை ஆளுமுறைமை-உலகில்
ஓர் புறத்து மில்லை,''

என்று மன்னர் ஆட்சியைச் சாடுகிருன்.

கவிஞனின் ஆவேசம் தணிகிறது. கதை சொல்கிரும் என்ற நினைவு வருகிறது.

சாரமற்ற வார்த்தை-மேலே
சரிதை சொல்லுகின்ருேம்''

என்று பாரதி கதையைத் தொடர்கிருன்.

அடுத்தபடி, பாஞ்சாலியைச் சூதில் தருமன் இழக்கிருன். பாரதியின் ஆவேசம் கடல் மடை திறந்தது போல், அல்ல, கடல் கரையை உடைத்துக்கொண்டு சீறி, சினந்து பாய்வதுபோல் பொங்கி வழிகிறது.

''வேள்விப் பொருளினையே-புலைநாயின்முன்
மென்றிட வைப்பவர் போல்,
நீள்விட்ட பொன் மாளிகை-கட்டிப் பேயினை
நேர்ந்து குடியேற்றல் போல்,
ஆள்விற்றுப்பொன்வாங்கியே-செய்தபூணையோர்
ஆந்தைக்குப் பூட்டுதல்போல்
கேள்விக்கு ஒருவரில்லை-உயிர்த் தேவியைக்
கீழ்மக்கட் காளாக்கினன்''

என்று உள்ளக் குமுறலை வெளியிடுகிருன். அதில் உருக்க உணர்ச்சியின் வீச்சு,

'செருப்புக்குத் தோல்வேண்டியே-
இங்குக் கொல்வரோ

செல்வக் குழந்தையினை?
விருப்புற்ற சூதினுக்கே-ஒத்த பந்தயம்
மெய்த்தவப் பாஞ்சாலியோ?

என்று கேள்வி உருவத்தில் ஒலிக்கிறது. உடனேயே கவிஞன் தனது கரை கடந்த கோபாவேசத்தைப் பீமன் வாய்மொழியாகப் பின்வருமாறு எதிரொலிக்கிறான் :

''இது பொறுப்பதில்லை-தம்பி
எரிதழல் கொண்டுவா
கதிரை வைத்திழந்தான்--அண்ணன்
கையை எரித்திடுவோம்''

என்று.

வில்லியின் வீமன் இத்தனை கடுமையாகப் பேசவில்லை. ''அரஉயர்த்தோன் கொடுமையினும் நின்னருளுக் கஞ்சினேன்.'' துரியோதனனுடைய 'கொடுமை'யைக் காட்டிலும் உனது 'அருளுக்கு'த்தான் அஞ்சுகிறேன் என்ற அளவில் தான் நிற்கிறான்.

'நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரம்,' நெடுஞ்செழியனின் செங்கோல் உணர்ச்சியை படம்பிடித்துக் காட்டுகிறதல்லவா? ''தென்புலம் காவல் என் முதல் பிழைத்தது'' என்ற அந்தப் பாண்டிய மன்னனின் மரபு பாரதி மரபு. காவல் என்று கருதும் தமிழ் மரபும், மக்களே மன்னர் என்ற ஜன நாயக உணர்வும் கொண்ட பாரதிக்குத் தருமன் நாட்டைத் தனது சொத்து எனக் கொண்டதால் சினம் மூண்டது.

அது போல் 'ஆணுக்குச் சரிநிகர் சமானம்' என்ற நவயுகக் கொள்கைக்கு நேர் எதிரிடையாகப் ''பாஞ்சாலி தன் அடிமை'' என்று தருமன் கருதியதால், கோபாவேசம் பொங்கி எழுந்தது பாரதிக்கு.

'பாஞ்சாலி சபதத்தில்' தொட்ட இடங்களிலெல்லாம் சொல்லழகும் கருத்தழகும், உணர்ச்சி ஆற்றலும், கற்பனை ஆற்றலும், ரசனை (அமைப்பு) ஆற்றலும்; துள்ளி விளையாடுவதைக் காண முடியும்.

''வேதத் திருவிழியாள்-அதில்
மிக்க பல்உரையெனும் கருமையிட்டாள்
சீதக் கதிர்மதியே-நுதல்
சிந்தனையே குழல் என்றுடையாள்''

என்றும்,

''கற்பனைத்தேன் இதழாள்-சுவைக்
காவியமெனும் மணிக் கொங்கையினாள்!''

என்றும் ''சரஸ்வதி வணக்கத்தில்'' பாரதி மரபு, பழைய புலவர்களை அவர்கள் முறையிலேயே வெல்கிறான்.

''– அந்தக்

காளை அருச்சுனன் கண்களிலும்
மாண்தகு திறல்வீமன் - தட
மார்பிலும் எனது இகழ் வரைந்துளதே''

என்று துரியோதனன் சொல்லும் வரிகள் 'அட்சரம் லட்சம் பெறும்' என்று சொன்னாலும் திருப்தி ஏற்படவில்லை.

''மனமாரச் சொன்னுயோ வீமா! என்ன
வார்த்தை சொன்னுய்? எங்கு
சொன்னுய்? யாவர் முன்னே''

என்று தொடங்கி,

''தருமத்தின் வாழ்வுதனைச் சூதுகவ்வும்;
தருமம் மறுபடி வெல்லும்'' எனும் இயற்கை
மருமத்தை நம்மாலே உலகம் கற்கும்
வழிதேடி விதிஇந்தச் செய்கை செய்தான்
கருமத்தை மென்மேலும் காண்போம் - இன்று
கட்டுண்டோம்; பொறுத்திருப்போம்; காலம் மாறும்
தருமத்தை அப்போது வெல்லக் காண்போம்
தனுவுண்டு காண்டீவம் அதன்பேர்''

என்று சொல்லி, அருச்சுனன் வீமனுடைய கோபத்தைத் தணிக்கும் இடம் நிகரற்ற நாடகப் பண்புடன் இயங்குகிறது.

'மாலை வருணனை'யில் அருச்சுனன் பாஞ்சாலிக்கு இயற்கை அன்னை காட்டும் இந்திர சாலங்களைச் சித்திரிப்பதைப் பாருங்கள். இங்கு இயற்கைக் காட்சியை அல்ல நீங்கள் காணுகிறீர்கள் - இயற்கைக் காட்சியைப் பற்றிய கவித்வக் காட்சியின் சிறப்பைக் காணுகிறீர்கள்.

''கணந்தோறும் வியப்புக்கள் புதிய தோன்றும்;
கணந்தோறும் வெவ்வேறு கனவு தோன்றும்;
கணந்தோறும் நவம்நவமாம் களிப்புத் தோன்றும்;
கருதிடவும் சொல்லிடவும் எளிதோ! ஆங்கே
கணந்தோறும் ஒருபுதிய வண்ணம் காட்டிக்
காளி பரா சக்தியவள் களிக்கும் கோலம்
கணந்தோறும் அவள் பிறப்பாள் என்று மேலோர்
கருதுவதன் விளக்கத்தை இங்குக் காண்பாய்''

இந்தக் காட்சியைக் கண்ட கண்ணாலேயே துரியோதனன் சபையைப் பாரதி காட்டுவதையும் பாருங்கள்.

''வல்லவன் ஆக்கிய சித்திரம் போலும்
வண்மைக் கவிஞர் கனவினைப் போலும்
நல்லதொழில் உணர்ந்தோர் செயல் என்றே
நாடு முழுதும் புகழ்ச்சிகள் கூறக்
கல்லையும் மண்ணையும் பொன்னையும் கொண்டு
காமர் மணிகள் சிலசில சேர்த்துச்
சொல்லை இசைத்துப் பிறர் செய்யுமாறே
சுந்தரமாம் ஒரு காப்பியம் செய்தார்.''

கண்ணன் பாட்டு

இந்தத் தொகுதியில் காணக் கிடக்கும் சுமார் இருபத்தைந்து பாடல்களும் தரம் உயர்ந்த பாடல்கள். கண்ணனைத் தோழனாகவும், தாயாகவும், தந்தையாகவும், அரசனாகவும், குருவாகவும், சீடனாகவும் பாவித்துப் பாடிய பாடல்கள். கருத்துச் செறிவு உடைய பாடல்கள். கண்ணனைக் குழந்தையாகவும் காதலனாகவும் காதலியாகவும் பாவித்துப் பாடியிருக்கும் பாடல்களில் சில பாரதி தனது கவிதா சக்தியின் சிகரத்தைத் தொட்டுக் காட்டியுள்ள பாடல்கள்.

பெரியாழ்வாரைப் பின்பற்றி பாரதி இந்தப் பாடல்களை செய்தார் என்று இலக்கிய ஆராய்ச்சி மன்னர் வ. வெ. சு. அய்யர் சுட்டிக் காட்டுகிறார். கண்ணன் பாட்டைப்பற்றி விமர்சிக்கும் பொழுது வ. வெ. சு. அய்யர் ''தெய்வீகக் காதல் கனிவில் பாரதியின் பாடல்கள் ஆண்டாள், பெரியாழ்வார் பாசுரங்கள் அளவு உச்சியைத் தொடவில்லை என்றாலும், பாரதியின் பாடல் சிறப்பைக் குறைத்து மதிப்பிட முடியாது'' என்கிறார்.

இங்கு பாரதியின் தனிச் சிறப்பு-கம்பனைப் போன்றது. அதாவது பாரதியின் பக்திச் சுவை அவனுடைய சமய அனுபூதி முறையிலிருந்து கனிந்தது அல்ல. அவனது உணர்ச்சி வெள்ளம் கவிதா சக்தியிலிருந்து கனிந்து பெருக்கெடுத்து ஓடியதாகும். இந்தப் புதுமை சிந்திக்கத்தக்கது.

'கண்ணம்மா - என் குழந்தை' என்ற பாடல், அற்புதத்திலும் அற்புதம்; மிக எளிய நடையும் எவர் நெஞ்சையும் கொள்ளை கொள்ளத்தக்க இன்னிசையும் உடைய ஓர் சிறந்த பாடல் அது. பிள்ளைப் பாசம் உள்ள வரையில் தமிழ் இலக்கியம் உள்ளவரையில் நிலைத்து நிற்கும் தரமுள்ள பாடல் அது.

இதைப் போல் தமிழ் மொழியில் ஒரு பாடல் முன்புமில்லை, பின்புமில்லை.

> ''பிள்ளைக் கனியமுதே - கண்ணம்மா
> பேசும் பொற்சித்திரமே
> அள்ளி அணைத்திடவே – என் முன்னே
> ஆடி வரும் தேனே
> கன்னத்தில்.....................
> ..................................................
> இன்பக் கதைகளெல்லாம்
> ..................................................
> மார்பிலணிவதற்கே
> ..................................................

வள்ளுவப் பேராசான் வடித்துத் தந்த,

> ''குழல் இனிது, யாழ் இனிது........''

என்று வரும் குறட்பாவும் இத்தனை மன எழுச்சியும் மகிழ்ச்சியும் கொடுக்கவில்லை. அதனைப் பாடப் பாட, தெவிட்டாத இன்பத்தைத் தரும் பாடல் இந்தப் பாரதி பாடல்.

கண்ணனைக் காதலன் பாவத்தில் கொண்ட ''ஆசை முகம் மறந்து போச்சே'' என்ற பாடல், அப்பப்பா அமுதிது.

"கண்கள் புரிந்து..........

..........................................

தேனைமறந் திருக்கும்..........

.........................................."

பாரதியின் அருள் ஆற்றல் பிழிந்து தந்த அமுதக் கவிதை இது.

சாதாரண மக்கள், குழந்தைகள் பேசும் சொற்களை வைத்துக்கொண்டு, கவிஞன் என்னென்னமோ செய்கிறான். மாணிக்கவாசகர், ஆண்டாள், வள்ளலார் ஆகிய அரும் கவிஞர்களின் கவிதையின் உச்சாணியில் கனிந்து கிடக்கும் உணர்ச்சியின் அனல் - தன்மையைப் பாரதி, அனாயசமாக நமக்கு அள்ளி வழங்குகிறான்.

"கண்கள் புரிந்துவிட்ட பாவம் - உயிர்
கண்ணன் உருமறக்கலாச்சு"

இந்த வரிகளில் உணர்ச்சியின் அனல் - தன்மையைச் சமைக்கும் விந்தையைப் பாருங்கள்!

"சாத்திரம் கோடிவைத்தான் - அவை
தம்மினும் உயர்ந்ததோர் ஞானம் வைத்தான்
மீத்திடும் பொழுதினிலே - நான்
வேடிக்கை யுறக்கண்டு நகைப்பதற்கே
கோத்த பொய் வேதங்களும் - மதக்
கொலைகளும் அரசர்தம் கூத்துக்களும்
மூத்தவர் பொய்ந்நடையும் – இள
மூடர்தம் கவலையும் அவள் புனைந்தாள்"

- கண்ணன் - என் தாய்.

"ஏழைகளைத் தோழமை கொள்வான் – செல்வம்
ஏறியவர் தமைக்கண்டு சீறிவிழுவான்"

- கண்ணன் - என் தந்தை.

"மேலவர் கீழவரென்றே-வெறும்
வேடத்தில் பிறப்பினில் விதிப்பனவாம்
போலிச் சுவடியை எல்லாம்-இன்று
பொசுக்கிவிட்டால் எவர்க்கும்
நன்மையுண்டென்பான்"

- கண்ணன் - என் தந்தை.

இந்தக் கருத்துக்களில் புதுமை மணம் கமழ்வதை யாரும் காணமுடியும்.

குயில் பாட்டு

தமிழ் இலக்கியத்தில் இப்படி ஒரு கவிதை பாரதிக்கு முன்பும் இருந்ததில்லை; பின்பும் இதுவரை எழவில்லை.

"குயில் பாட்டில் பாரதியின் நடை, இதற்குமுன் தமிழ் இலக்கியம் கண்டிராத ஒரு வெற்றியாய் அமைந்திருக்கிறது. பாட்டு முழுவதும் ஒரே இனிமையான வாக்கு; ஒரே கவிதை வெள்ளம். வேகமும் நயமும் எந்த இடத்திலும் குறைய வில்லை" என்கிறார், 'தற்காலத் தமிழ் இலக்கியம்' என்ற சிறந்த நூலின் ஆசிரியர். இனிமையில், ஓசை இன்பத்தில், நெஞ்சை உருக்கும் தன்மையில், வேகத்தில், நயத்தில், நடையில், இவை யாவும் ஒன்று திரண்ட நவீன கவிதா வேகத்தில் குயில் பாட்டுக்குக் குயில் பாட்டே நிகர்.

தனியன்கள்

"தெள்ளுற்ற தமிழமுது" என்று பாரதி ஒரு இடத்தில் கூறுகிறான். இந்தத் 'தெளிவு' எளிமையும் நேர்மையும் கலந்து ஏற்படுகிறது. சொல் தெளிவு, நடைத் தெளிவு மட்டும் அன்று, கருத்துத் தெளியும் கலந்தே மேற்படித் 'தெளிவு' ஏற்படுகிறது.

“நிமிர்ந்த நன்னடை
நேர்கொண்ட பார்வையும்”

உடையவள் புதுமைப் பெண் என்று பாரதி பாடினான். பாரதியின் தமிழும் இந்த இயல்புகளை உடையது என்று தமிழ் இலக்கிய ஆராய்ச்சி அரசன் வையாபுரிப் பிள்ளை கூறுகிறார்.

முரசுப் பாட்டில்,

“வெள்ளை நிறத்தொரு பூனை - எங்கள்
வீட்டில் வளருது கண்டீர்
பிள்ளைகள் பெற்றந்தப் பூனை - அவை
பேருக் கொரு தரமாகும்
சாம்பல் நிறம் ஒரு குட்டி - கரும்
சாந்தின் நிறம் ஒரு குட்டி
பாம்பின் நிறம் ஒரு குட்டி – பசும்
பாலின் நிறம் ஒரு குட்டி
எந்த நிறம் இருந்தாலும் அவை
யாவும் ஒரே தரம் அன்றோ!
இந்த நிறம் சிறிதென்றும் - இஃது
ஏற்றம் என்றும் சொல்லலாமோ?
வண்ணங்கள் வேற்றுமைப்பட்டால்- அதில்
மானுடர் வேற்றுமை இல்லை
எண்ணங்கள் செய்கைகள் எல்லாம்- இங்கு
யாவர்க்கும் ஒன்றெனல் காணீர்”

இந்த அடிகளில் காணப்படும் ரசனைச் சிறப்பு, கருத்துத் தெளிவு, உவமை அழகு, கருத்துப் புதுமை; உணர்ச்சியோட்டம், கற்பனை ஆற்றல் - யாவும் புதுமை முரசு முழக்குகின்றன -உலக இலக்கியத்தில் உயர் இடம் பெறத்தக்க அடிகள். ‘ஜார் வீழ்ச்சி’ என்ற பாடலில்,

"இமயமலை வீழ்ந்ததுபோல்
வீழ்ந்துவிட்டான் ஜாரரசன்
இவனைச் சூழ்ந்து
சமயமுள படிக்கெல்லாம்
பொய்கூறி அறங்கொன்று
சதிகள் செய்த
சுமடர் சடசடவென்று
சரிந்திட்டார் புயற்காற்றுச்
சூறை தன்னில்
திமுதிமென மரம் விழுந்து
காடெல்லாம் விறகான
செய்திபோலே!"

என்று ஜார் வீழ்ச்சியைப் படம் பிடித்துக் காட்டுகிறான். இத்தனை மன எழுச்சி மிக்க, உயிர் பெய்து உருவாக்கிய சித்திரம், உலக இலக்கிய முழுவதும் தேடினால் ஒரு சில கிடைக்குமோ என்னவோ? ஆனால் தமிழ் இலக்கியத்தில் இது மாதிரிப் பிறிதொரு இலக்கியச் சித்திரமில்லை என்று துணிந்து சொல்லலாம்.

"காக்கைச் சிறகினிலே நந்தலாலா—நின்தன்
கரியநிறம் தோன்றுதையே நந்தலாலா
தீக்குள் விரலைவிட்டால் நந்தலாலா—நின்னைத்
தீண்டும் இன்பம் தோன்றுதையே நந்தலாலா"

சாதாரணமாக, அழகுடையதாக, இன்பம் பயப்பதாகக் கருதப்படாத சாதாரணப் பொருள்களில் புத்தழகையும், புத்தின்பத்தையும் பாரதி காண்கிறான்.

முதலில் ஓர் உணர்ச்சி உலகம்-ஓர் ஆத்மானுபவம்-ஒரு உவமை. உவமைக்குப் பின் ஓர் உணர்ச்சி உலகம்-ஓர் ஆத்மானுபவம்.

இது மிகச் சிறந்த உணர்ச்சி மயமான கவிதை.

''ஊழிக்கூத்து'' என்ற பாடல் போன்ற ஒரு பாட்டு தமிழில் வேறில்லை. ''வெடிபடும் அண்டத்து இடி பல தாளம் போட'' என்று தொடங்கும் அந்தப் பாட்டு முழுவதிலும், கால சக்தியின் பேரெழுச்சியை ஆத்மீகப் பேராவேசம், ஒவ்வொரு சொல்லும் பேராற்றலுடன், எதிரொலிக்கும் பாரதிக் கவிஞனின் நாதப் பேராற்றலுடன் ஒலிப்பதைக் கேட்கிறோம். ''திக்குகள் எட்டும் சிதறி, பக்க மலைகள் உடைந்து வெள்ளம் பாய்ந்த, காலத்தின் கூத்தினைக் கண் முன்பு கண்ட'' பாரதி, கவிதாவேசத்தின் உச்சாணி நிலையில் ஏறி ஊழிக்கூத்தினைப் பாடுகிறான். இங்கு, ஜனநாயகத் தமிழ், புத்தம் புது வேகத்தோடு அதன் கொடுமுடியைத் தொடுகிறது.

## பாரதியின் மதிப்பீடு

''சுவை புதிது, பொருள் புதிது
வளம் புதிது, சொற் புதிது-சோதிமிக்க
நவகவிதை, எந்நாளும்
அழியாத மகா கவிதை''

என்று, பிரெஞ்சு நாட்டில் சிறந்து விளங்கிய புலவர்களும், ஆங்கிலத் தீங்கவி யரசர்களும், தனது கவிதையைப் பாராட்டி, மொழி பெயர்த்துப் போற்றினார்கள் என்று பாரதி கூறுகிறான். ''திறமான புலமையெனில் வெளிநாட்டார் அதை வணக்கம் செய்தல் வேண்டும்'' என்ற கருத்துக் கொண்டவன் ஆதலால், பிரெஞ்சுப் புலவர்களும் தனது கவிதையை, ''நவ கவிதை, அழியாத மகா கவிதை'' என்று புகழ்ந்ததைப் பெருமிதத்தோடு கூறுகிறான்.

ஆனால், அவன் காலத்துத் தமிழ்ப் பெரும் புலவர்கள் பாரதியைப் பாராட்டினார்களா? இல்லை. மகாமகோபாத்யாய

டாக்டர் சாமிநாத அய்யர் ‘‘கண்டதும் கேட்டதி’’லும் எதாவது பாரதியைப் பற்றிச் சொன்னாரா? இல்லை. ‘‘என் சரிதை’’யில் அவனைப் பற்றிக் குறிப்பிட்டாரா? இல்லை. டாக்டர் சாமிநாத அய்யரின் எழுத்துக்கள் முழுவதிலும் ஒரு குறிப்புக்கூடப் பாரதியைப் பற்றி இல்லை. மறைமலை அடிகளாரும் பாரதியைப் புகழ்ந்து ஒரு குறிப்புக்கூட எழுத வில்லை. இருபதாம் நூற்றுண்டின் முற்பகுதியில் இருந்த எந்தப் பெரும் புலவரும் பாரதியைக் குறிப்பிட்ட கவிஞனகக் கருதினதும் இல்லை; மதித்ததுமில்லை. அதே பொழுதில், பன்மொழிப் புலவர்களும் மேதைகளுமான அரவிந்த கோஷும், வ. வெ.சு. அய்யரும், பாரதியின் கவிதைகளைக் கண்ணில் ஒத்திக் கொண்டார்கள். தமிழ்ப் பெரியார் திரு. வி. க., இந்த யுகத்தைப் பாரதியுகம் என்று கூறினர். பெரு நாவலர் சோமசுந்தர பாரதியாரோ ‘‘பாரதி பாட்டின் ஒரு அடிக்குக்கூட எனது தமிழ் அறிவு இணையாகாது’’ என்று பாரதிபால் தமக்குள்ள பேரன்பையும் பெரு மதிப் பையும் உருக்கமாக வெளியிட்டார்.

இன்றையச் சில தமிழ்ப் பெரும் பண்டிதர்களும், தமிழ்ப் பேராசிரியர்களும் பாரதியின் கவிதைச் சிறப்பை எப்படியோ ஒப்புக்கொண்டு, வேதாந்த, பக்திப் பாடல் களில்தான் அது நிலைத்திருக்க வாய்ப்பிருக்கிறதென் கிறார்கள். அதே பொழுதில், தமிழ்ப் பெருமக்களோ பாரதியின் கவிதை, ‘‘நவ கவிதை, எந்நாளும் அழியாத மகா கவிதை’’ என்பதை, மேலும் மேலும் உணர்ந்து வருவ தோடு, உலகத்திற்கும் உணர்த்தி வருகிறார்கள்.

# கம்பனு? காப்பியனு?

"தாமரை"
செப். 1960

'பாரதி பாராட்டிய முதற் பெரும் புலவன் கம்பனல்ல, காப்பியனே' என்று சமீப காலத்தில் ஒரு கரடி விடப் பட்டிருக்கிறது.

> ''யாமறிந்த புலவரிலே கம்பனைப் போல்
> வள்ளுவர்போல் இளங்கோவைப் போல்
> பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை..........''

என்ற அடிகளில் கம்பனைப் போல்' என்ற இடத்தில் 'காப்பியன் போல்' என்றுதான் இருக்க வேண்டும், பாரதி 'காப்பியன்' என்றுதான் பாடினுன்; எனக்குத் தெரியும் என்று ஒரு தமிழ்ப் பாதுகாவலர் ஒரு திடீர்க் கருத்துக் குண்டை எறிந்தார். இவர் வரிசையில் நின்று கொண்டு சிலர் அவலை நினைத்து உரலை இடிக்கிருர்கள்.

ஏற்கனவே, கம்பன்-எதிரிகள் என்று முத்திரை குத்திக் கொண்டவர்கள்தான். இவ்வாறு பாரதி பாட்டைத் திருத்தத் தொடங்கி யிருக்கிருர்கள். எனவே, இதில் ஆச்சரியப்படுவதற்கு ஒன்றுமில்லை.

பாரதி இலக்கியம் முழுவதையும் படித்துப் பார்த்தால் ஒரு உண்மை புலனாகும். அவன் உச்சி மேல் வைத்துப் புகழ்கிற தமிழ்ப் பெரும் புலவர்கள் மூவர். இவர்களிலும் கம்பனிடமே பாரதிக்கு அதிக ஈடுபாடு. வள்ளுவனைவிட, இளங்கோவைவிட, கம்பனையே பாரதி அதிக இடங்களில் புகழ்ந்து பேசுகிறான். 'செந்தமிழ் நாடு' என்ற பாட்டில்,

"கல்வி சிறந்த தமிழ்நாடு- புகழ்க்
**கம்பன்** பிறந்த தமிழ்நாடு"

என்று பாடுகிறான்.

'தமிழ்ச் சாதி' என்ற பாட்டிலும்,

"எல்லை யொன்றின்மை எனும் பொருள் அதனைக்
**கம்பன்** குறிகளால் காட்டிட முயலும்
முயற்சியைக் கருதியும்"

என்று பாடுகிறான்.

"சுய சரிதை"யிலும்,

"கம்பன் என்று ஒரு மானுடன் வாழ்ந்ததும்" என்று பாடுகிறான்.

'நான்' என்ற ஞானப் பாடலில்,

"**கம்பன்** இசைத்த கவியெலாம் நான்
காருகர் தீட்டும் உருவெலாம் நான்"

என்று பாடுகிறான்.

'சான்றோர்' வரிசையில், சுப்பராம தீட்சதரைப் பற்றிப் பாடுகிற பாடலில்,

"கன்னனெடு கொடை போயிற்று; உயர்
**கம்பநாடனுடன்** கவிதை போயிற்று"

என்று பாடுகிறான்.

இவ்வாறு கம்பனைப் பற்றிப் பலப் பல இடங்களில் பாடுகிற பாரதி, தொல்காப்பியனைப் பற்றி ஓரிடத்தில்கூடப் பாடவில்லை. ஆகவே "யாமறிந்த புலவரிலே" என்று பாடுகிற இடத்திலும் 'கம்பனைப் போல்' என்றுதான் பாடியிருக்கிறனே யன்றி, "காப்பியனைப் போல்" என்று பாடவில்லை என்பதில் சந்தேகமே இல்லை.

கவிதைகள் இருக்கட்டும். வசன நூற்களிலும் பாரதி கம்பனைப் புகழ்ந்திருப்பதையே நாம் காண முடிகிறது.

"கட்டுரைகள், கலைகள்" என்ற தொகுப்பில், 'கவி' என்ற கட்டுரையில், "கம்பன், இளங்கோ, திருவள்ளுவர் முதலிய மகாகவிகளுக்கு ஞாபகச் சிலைகளும் வருஷோத்ஸவங்களும் ஏற்பாடு செய்ய வேண்டும்" என்று எழுதியுள்ளான்.

1917, ஜூன் 9-ம் தேதி எழுதிய "தெலுங்கு மகா சபை" என்ற கட்டுரையில்,

"தேவாரத்திலும், திருவாசகத்திலும், திருவாய்மொழியிலும், திருக்குறளிலும், கம்ப ராமாயணத்திலும் அன்பு கொள்ளாதவனுக்குத் தமிழபிமானம் உண்மையிலே பிறக்க நியாயமில்லை" என்று கூறுகிறுன்.

1921 பிப்ரவரி 24-ல் எழுதிய "மகாமகம்" என்ற கட்டுரையில்,

"வடமொழியில் வால்மீகி, காளிதாசர்களையும் தமிழில் கம்பனையும், புகழேந்தியையும், இங்கிலீஷில் ஷெல்லியையும் 'கவிகளின் கவி' என்று சிறப்பித்துச் சொல்கிறுர்கள்" என்று எழுதியுள்ளான்.

இவ்வாறு தனது வாழ்நாள் முழுவதும் கம்பனைக் கொண்டாடினுன் பாரதி.

மாருக, தொல்காப்பியத்தையும் நன்னூலையும் கரைத்துக் குடித்த தமிழ்ப் பாண்டித்யத்திற்கும் பாரதிக்கும்

வெகு தூரம். இலக்கணச் சூத்திரங்களைத் தலை கீழாகச் சொல்லும் சாமர்த்தியம் பாரதிக்குக் கொஞ்சம்கூட இல்லை என்கிறார் வ. ரா. ''தற்கால முறைப்படி இவர் ஆரம்ப முதல் ஆங்கிலக் கலாசாலைகளிலேயே படிப்பிக்கப் பெற்றாரே யன்றி, தனித் தமிழ் ஆசிரியர்களிடத்தில் தமிழ்ப் பாடம் கற்றாரில்லை'' என்று கூறுகிறார், பெரு நாவலர் சோமசுந்தர பாரதியார். இவற்றாலும், பாரதி, வள்ளுவனோடும், இளங்கோவோடும் ''காப்பியனை''ப் புகழ்ந்திருக்க முடியாது.

பின் ஏன் சில 'தமிழ்ப் பாது காவலர்கள்' இந்த முயற்சியில் இறங்கியிருக்கிறார்கள்? பாரதியின் பெயராலும் ''கம்பன்-எதிர்ப்பு'' நடத்த முடியுமா, பார்ப்போம் என்ற சபலம்தான்.



# பாரதியின் இலக்கியப் புரட்சி

"தாமரை"

செப். 1960.

தேசபக்தி சொந்தச் சொத்து

நமது நாட்டில் தேசபக்த உணர்ச்சி உறுத்தெழுந்தது, வங்காளப் பிரிவினையால். விபின் சந்திரபாலரின் எழுத்தும் பேச்சுமே அந்தக் காலத்தில் நம்மவர்களின் மனப் பான்மையைக் கலக்கி மறித்தன. இது 1905-ம் ஆண்டுக்குப் பின்னர்.

ஆனல் "பாரதியோ, 1904-ம்வருஷத்திலேயே எனக்கு அரசியலில் தீவிர ஊக்கமும் உற்சாகமும் ஏற்படும்படி செய்தான். பாரதியின் தேசபக்தி கடன் வாங்கின சரக்கல்ல. அது அவனுடைய சொந்தச் சொத்து. தமிழ் நாடுதான் பாரதி, அப்படித்தான் எனக்குச் சொல்லத் தெரியும்" என்று பாரதியின் நெருங்கிய நண்பரான வக்கீல் துரைசாமி அய்யர் கூறுகிருர்.

பாரதியின் தேசபக்தி சுயம்பு; மாற்றறியாத செழும் பசும் பொன். இது பெருகிட்ட பழைமை அல்ல; புத்தப் புதுமை. இது புதிய அறம்; இந்த யுகத்தின் அறம்.

## சின்னச் சங்கரன் கதை

கிண்டல் கணைகளால் நிலப் பிரபுத்துவத்தைச் சல்லடைக் கண்களாகத் துளைத்தெடுக்கும் அற்புதமான காப்பியம். இது பாரதியின் புத்தம் புது முயற்சி. பழைமை யெல்லாம் சிங்கார ரசம் பொங்கி வழியும் 'மடல்களும்' 'உலாக்களும்'தான்; 'கூளப்ப நாயக்கன் காதல்' போன்றவைகள் தான். பாரதியின் இந்தக் கதை பழைமையுமல்ல; பழைமைக்குப் புதிய மெருகுமல்ல.

"இருபத்தொன்பது அத்தியாயங்களைக் கொண்ட இந்த நூல் எதைப் பற்றிய நூல் என்று கேட்கிறீர்களா? அது நாவல் அல்ல; பாரதியாரின் சுயசரிதமும் அல்ல. விகடம் நிறைந்தது; ஆனால் வேடிக்கைக் கதை அல்ல. புராணம் அல்ல; உபதேச உபநிஷதமும் அல்ல. நாடகம் அல்ல; முழுக் கிண்டலும் அல்ல. எனினும் நான் மேலே குறிப்பிட்ட எல்லா அம்சங்களும் அந்த நூலில் இருந்தன. அதை அக்காலத் தமிழர்களின் வாழ்க்கை வரலாறு என்று கூடச் சொல்லலாம்" என்கிறார் ஆசிரியர் வ. ரா.



## ஞான ரதம்

இது பாரதி அருளிய ஒப்பில்லாத கற்பனை படைத்த நூல். அதோடு தமிழ் மொழியில் நேர்நிகரற்ற உரை நடை நூல். இப்படி ஒரு நூல் தமிழ் மொழியில் முன்பும் பிறந்ததில்லை; பின்பும் பிறந்ததில்லை. இதன் உருவமும் உள்ளுறையும் புதுமை மிக்கன. எந்த இலக்கியப் பரம்பரை வாதியும் (Literary Traditionalist) கனவினுள் கனவில் கூட இந்தப் புதுமையை நினைக்க முடியாது.

## ''இந்தியா'' (வார இதழ்)

''சுதேச மித்திரன்'' உதவி ஆசிரியர் பதவியை விட்ட பிறகு, பாரதி துவக்கிய தமிழ் வார ஏடு ''இந்தியா.'' ''நவசக்தி'', ''யுகாந்தரம்'', ''வந்தேமாதரம்'', ''நியூ இந்தியா'' முதலிய வங்காளத்தில் தோன்றிய புரட்சிப் பத்திரிகைகள் மாதிரி ''இந்தியா'' தமிழகத்தில் அன்று மதர்ந்தெழுந்த தேசீயத் தீவிரப் போக்குக்குப் பணிபுரிந்தது.

சிவப்பு நிறம் அபாயக் குறி என்று சொல்வதுண்டு. 'இந்தியா ஏடு சிவப்புத் தாளில் அச்சிடப் பெற்றது. காங்கிரசின் புதிய கொள்கையைத் தாங்கி வெளிவந்தது. பாரதி பழைய போக்கை 'முறித்து'க்கொண்டு கண்டறியாப் புது வழக்கத்தைப் பத்திரிகை உலகில் உண்டு பண்ணினான்.



## ''சென்னை ஜன சபை''

சென்னை நகரில் 'மகா ஜன சபை' என்று ஒரு ஸ்தாபனம் இன்று இருக்கிறதல்லவா? இது அந்த நாளிலும் இருந்தது. அன்று சர்க்கார் பக்தர்களையும், 'பெரிய மனிதர்' களையும் கொண்ட சபையாக இருந்தது. உருப்படியான வேலை எதையும் செய்ய முதுகெலும்பு இல்லாத சபையாக இருந்தது. எனவே கர்ம வீரனும் தீவீரவாதியுமான பாரதி, 'சென்னை ஜன சங்கம்' என்ற ஒரு சங்கத்தை நிறுவினான். அது உயிரோடு இயங்கிய வரையில், போலீஸாரின் கடைக்கண் பார்வை அதன் மீது விழுவது நிற்கவில்லை.

பாரதியின் வாழ்வில் தெறித்த புரட்சி - புதுமைப் பொறிக்கு இது ஒரு எடுத்துக்காட்டு.



பாரதி கோகலே, மேத்தா போன்ற மிதவாதத் தலைவர்களைப் பழித்தான்.

"நாமென்ன செய்வோம் துணைவரே – இந்தப்
பூமியில் இல்லாத புதுமை கண்டோம்"

என்று அவர்கள் புலம்பியதாகப் பாடினன்.

அது மட்டுமல்ல, இலக்கியத் துறையிலும் அவன் நன்னூல் பண்டிதர்களின் திசையைத் திரும்பியும் பார்த்தறியான். குண்டு சட்டியில் குதிரை ஓட்டுவது போல், அவன் பழைமைக் குழியில் விழுந்து உழலவில்லை. "புதிய கருத்துக்களையும், அவற்றைத் தாங்கிய செல்லப் புதிய யாப்பு முறைகளையுமே அவன் நாடினன், தேடினன்" என்கிறார், பாரதியின் இளமை நண்பரும் தமிழ்ப் பேரறிஞருமான சோமசுந்தர பாரதியார்.



"கிருஷ்ண ஸ்தோத்திரம்"

இது சர்க்காருக்கு மன எரிச்சலை உண்டு பண்ணிய தோத்திரப் பாடல். "இந்தியா" இதழில் வெளிவந்த பாடல் இது.

"எனக்குப் பசுக்களைக் கொடு உடல் நலத்தைக் கொடு, நானும் என் குடும்பமும் நன்மையடைய அருள் புரிவாயாக! உன் பாத மலர் என்றைக்கு என் கண்ணில் படுமோ? எமதூதர்கள் என்னைத் தொல்லைப் படுத்தாமல் தடுப்பாயாக!" என்று பண்டைய வேதமாகிய ரிக்வேதம் கடவுளைத் தோத்திரம் செய்கிறது.

அனல் பாரதி புதுமையாகப் பாடுகிறன். மணிவாசகரும், நாவுக்கரசரும், நம்மாழ்வாரும், பெரியாழ்வாரும், தாயுமானவரும். வள்ளலாரும் பாடாத விதத்தில் புதுமையாகப் பாடுகிறன்:

''என்று தணியும் இந்த சுதந்திரத் தாகம்?
என்று மடியும் எங்கள் அடிமையின் மோகம்?''

என்று பாடுகிறான்.

சமுதாயத்தின் பிரதிநிதி என்ற உணர்வோடு, 'எங்கள் சுதந்திரத் தாகம்', 'எங்கள் அடிமையில் மோகம்' என்று பாடுகிறான்.

பாரதியின் புதுப் பேச்சும், உயிர் நிறைந்த புதுப்படைப்பும் அந்நிய அரசாங்கத்துக்குப் பிடிக்கவில்லை. பழைமையின் மீது ஏற்பட்ட புதிய மெருகு என்றால் சர்க்கார் வாளா இருந்திருப்பார்கள்.



''பதஞ்சலி யோக சூத்திரம்''

இந்த வடமொழி நூலைச் சுவாமி விவேகானந்தர் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்திருக்கிறார். மூலத்திற்கும் விவேகானந்தரின் மொழி பெயர்ப்புக்கும் சில இடங்களில் முரண் இருக்கிறது என்பது பாரதியின் கருத்து.

பாரதியின் குருமணி நிவேதிதாதேவி, நிவேதிதாவின் ஞானத்தந்தை விவேகானந்தர். எனவே பாரதியின் ஞானத் தாத்தா விவேகானந்தர்.

அத்தகைய பெரியாரிடத்திலும் குறை கண்ட பாரதி, தான் நடத்திய ''கர்மயோகி''என்ற பத்திரிகையில், யோக சூத்திரத்தைத் தமிழ்ப் படுத்தி வெளியிட்டார். பாரதியின் மொழி பெயர்ப்பு மிக நன்றாக இருக்கிறதென்று ஒரு டஜன் சிறந்த மொழிகளில் நிரம்பிய பாண்டித்யம் பெற்ற அரவிந்தரைப் போன்ற பேரறிவாளர்கள் பாராட்டினார்கள் என்று வ, ரா. கூறுகிறார்.

# பாரதியின் பாடல்கள் காலங் கடந்த பாடல்களா?

'தாமரை'
செப், 1960.

பாரதியின் பக்திப் பாடல்களும், வேதாந்தப் பாடல்களும்தான் நிலையாக நிற்கத் தக்கவை. பாரதியாரின் தேசியப் பாடல்கள் நிலைத்து நிற்கும் தரமுடையவையல்ல. பாரத நாடு சுதந்திர மடைந்த பிறகு அவற்றின் தரமும், மதிப்பும் குறைந்து விட்டன; அவை காலகர்ணப்பட்டு விட்டன என்று சில "தீர்க்கதரிசிகளும்", பாரதி இலக்கியத்தை மெத்தப் படித்துள்ள சில அறிஞர்களும் சமீப காலத்தில் பேசியும், எழுதியும் வருகிறார்கள். பாரதியின் தேசிய கீதங்கள் கவிதா ரீதியிலும், இலக்கிய ரீதியிலும் அதிகச் சிறப்புடையன அல்ல என்று அந்தக் காலத்தில் இத்தகைய பண்டித மணிகள் கூறினார்கள். இவர்களும், இவர்களைப் போன்றவர்களும் இந்தக்காலத்தில் நாட்டுக்குச் சுதந்திரம் கிடைத்தது விட்டதால் இந்தப் பாடல்களுக்குத் தேவையும், உயிரும் குன்றி இவை வரவேற்பிழந்து விட்டன என்கிறார்கள். தேசியப் பாடல்கள், விடுதலைப் பாடல்கள், சீர்திருத்தப் பாடல்கள் ஆகியவற்றிக்கு எதிரிடையாகப் பக்திப் பாடல்கள், வேதாந்தப் பாடல்களையும் பாரதியின் முப்பெரும் பாடல்களான பாஞ்சாலி சபதம், கண்ணன் பாட்டு, குயில் பாட்டு ஆகியவைகளையும் உயர்த்திப் பிடிக்கிறார்கள்.

இந்த இலக்கிய மேதாவிகள் சொல்வதை ஒப்புக் கொண்டால் கடவுளைப் பற்றிய பாடல்களும், காதலைப் பற்றிய பாடல்களுமே நீடித்து நிற்கும் பாடல்களாக விளங்க முடியும். மற்றப்படி மனிதனைப் பற்றிய பாடல்களோ, இதர பொருள்களைப் பற்றிய பாடல்களோ நீடித்து நிற்கும் பாட்டு களாக விளங்க முடியாது என்று ஏற்படுகிறது. இந்த உண்மையை இலக்கிய வரலாறு ஒப்புக்கொள்ளுகிறதா? இல்லை என்றே சொல்வோம்.

கடவுளைப் பற்றிய பாடல்களெல்லாம், மணிவாசகரின் திருவாசகம் போலவும், ஆண்டாளின் பாசுரம் போலவும், வள்ளலாரின் அருட்பா போலவும், நிறைந்த கனிவோடு என்றைக்கும் படிப்போர் - பாடுவோர் உள்ளத்தை வெள்ள மாக உருக்கும் தன்மை உடையனவாய் விளங்குகின்றனவா? வானம்பாடியைப் பற்றித்தானே ஆங்கில நல்லிசைப் புலவனை ஷெல்லி பாடியிருக்கிறன். அது மூன்று நாளில் முத்து மழை பெய்துவிடக் கூடிய பாடலா? ஆங்கில இலக் கியம் உள்ளளவும் நிலைத்து நிற்கக் கூடிய பாடல்தானே அது? உருத்திரங் கண்ணனார் பட்டினப் பாலையில் பூம் புகாரின் கடை வீதியைப் படம் பிடித்துக் காட்டுகிருரே, அந்த ஓவியம் இரண்டு ஆயிரம் ஆண்டுகளுக்குப் பின் இன்றும் நெஞ்சை அள்ளும் அமர சித்திரம் தானே?

எத்தனை கவிராயர்கள் பாடிய எத்தனை தோத்திரக் கீர்த்தனங்கள் பாடி வாய் மூடு முன் நீர்க் குமிழி போல் மறைந்து போயிருக்கின்றன. எத்தனை மடத்துச் சாமி களின் வேதாந்தப் புலம்பல்கள் எழுதின ஏட்டுக்கும் விலை பெருது அந்தக் கணமே குப்பை மேட்டில் போய் விழுந் திருக்கின்றன.

இந்த இலக்கிய உண்மைகள் எந்த உண்மையைத் தெளிவு படுத்துக்கின்றன? ஒரு பாட்டு பாட்டாக இருந்தால்

நீடித்து நிலைக்கும் என்பதையும், 'பாட்டுப் போல்' இருந்தால் விரைவாகக் கடையைக் கட்டிக் கொள்ளும் என்பதையுமே தெளிவு படுத்துகிறது. பாட்டு என்றால் அது இசைச் சுவையுடன் விளங்க வேண்டும். நடையழகுடன் விளங்க வேண்டும். தெள்ளிய எளிய சொற்களுடன் விளங்க வேண்டும். கற்பனை நயத்துடன் விளங்க வேண்டும். கனிந்த மன உணர்ச்சியை எதிரொலிப்பதாக விளங்க வேண்டும். இத்தனை கூறுகளையும் கொண்டு மனித வர்க்கத்தின் உயர்வு எண்ணி ஒரு பாட்டு உருவாகுமானால் அது நமது உள்ளத்தை என்றென்றும் கவரக்கூடிய ஒரு அற்புத கவிதைப் படையலாகி விடும். சுக்கு, மிளகு, திற்பலியையோ; சுண்டெலியையோ பற்றிப் பாடட்டும். அல்லது மாமேருவையோ, மாகடலையோ பற்றிப் பாடட்டுமே. மனிதனைப் பற்றிப் பாடட்டும். மிருகத்தைப் பற்றிப் பாடட்டும். அல்லது "மகா சக்தி, பரா சக்தியைப்" பற்றிப் பாடட்டுமே. ஏன், எந்தப் பொருளைப் பற்றி வேண்டுமானாலும் பாடட்டும். மேற்கூறிய பண்புகள், ஒழுங்கு அமையப் பெற்ற பாட்டாக இருந்தால் அது நிலையான பாட்டாக விளங்கும். மேற்கூறிய பண்புகள் சற்றேனுமில்லாமல் "சகல கலாவல்லியையோ, அலகிலா விளையாட்டுடைய ஆண்டவனையோ" பற்றிப் பாடினாலும் அது ஒரு கணம்கூட நிலைத்து நிற்கத் தகுதி பெறாது.

கவிமணியும் இந்தக் கருத்தை ஒப்புக்கொண்டு எந்தப் பொருளும் கவிதைக்கு ஏற்ற பொருள் என்று அறிவுறுத்தி விட்டு,

> உள்ளத்துள்ளது கவிதை - இன்பம்
> உரு வெடுப்பது கவிதை
> தெள்ளத் தெளிந்த தமிழில் - உண்மை
> தெரிந்துரைப்பது கவிதை

என்று பாடுகிறார்.

ஆகவே, பக்திப் பாடலா, வேதாந்தப் பாடலா அல்லது தேசியப் பாடலா, விடுதலைப் பாடலா என்பதில் மட்டும் ஒருபாட்டு நீடித்து நிற்க முடியாது. பாரதி இலக்கியங்களில் அவனுடைய தேசிப் பாடல்களுக்கு உயர்ந்த இடமுண்டு. அது மட்டுமல்ல, இரண்டாயிரம் ஆண்டைய தமிழிலக்கியங்களிலேயே பாரதியின் தேசியப் பாடல்களுக்குத் தனியிட முண்டு.

பாரதி பாரத நாட்டின் பண்டைப் பெருமையையும், தமிழ் நாட்டின் தொன்மைப் புகழையும் தனது மனஉலகில் உருவகப் படுத்துகிறான். அதிலிருந்து பொங்கியெழுந்த பேரார்வத்தோடு நாட்டின் தற்கால நிலைமையை உன்னி உன்னி உணர்கிறான், கசிந்து, கசிந்து கண்ணீர் மல்குகிறான். தனது தாய்த் திருநாடு எல்லாத் துறைகளிலும் தலை நிமிர்ந்து நிற்க வேண்டும் என்று விரும்பி நம்பிக்கை கொண்டு களிப்பெய்தி தேசபக்தி ஆவேசத்தில் வீறு கொண்டெழுகிறான். அதன் சென்ற காலப் பெருமையைப் போற்றியும் வருங்கால வெற்றியை வேண்டியும் நிறைந்து கனிந்த உணர்ச்சிப் பெருக்கோடு பாடுகிறான். தெள்ளிய நடையில் தீங்கவிச் சுவையைக் கலந்து பொருளும், இசையும் பழமும், சுவையும் போல இணைந்து ஒளிவிடக் கவி மழை பொழிகிறான்.

ஒப்பற்ற தமிழ்ப் பெரும் இலக்கியத்தில் தமிழன் உள்ள வரையில், நாட்டன்பு உணர்ச்சி உள்ள வரையில் தேசியப் பாடல்களைப் பொறுத்தமட்டில் 'பாட்டுக்கொரு புலவன்' பாரதிதான். ஆங்கில மொழியிலுள்ள தேசிய கீதங்களுக்கு எங்கள் பாரதியின் தேசியப் பாடல்கள் பொருள் சுவையிலும் சரி, இசைச் சுவையிலும் சரி, ஒரு துளிகூடக் குறைந்தவைகளல்ல.

தமிழ்ப் பெரு மக்களின் கலை இலக்கிய வளத்தின் சீர் சிறப்புகளையும் வரலாற்றின் மாண்பையும் ஓரே ஓவியத்தில்

நேர் நேராகக் கண்டு ஆனந்தத் தாண்டவமாட 'செந்தமிழ் நாடு' என்ற பாரதியின் பாடலை நீக்கிவிட்டால் தமிழில் வேறு ஒரு பாடல் உண்டா? "எந்தையுந் தாயும்" 'மன்னும் இமயமலை' 'பாருக்குள்ளே நல்ல நாடு' என்ற முதல் அடியை உடைய பாடல்களிலும், இன்னும் தமிழ், விடுதலை, புதுமைப் பெண் முதலியவை பற்றிய பல்வேறு பல்வேறு பாடல்களிலும் கவிதைச் சுவையும் இனிய ஓசைப் பெருக்கும் பொங்கி வடியும்படி பாரதி பாடியிருக்கிறுன். இவைகளையெல்லாம் நல்ல இசைச் சுவையோடும், உணர்ச்சி புடன் பொருள் விளங்கும் தெளிவோடும் இசைவாணர்கள் பாடுவார்களாயின் கேட்போரை ஒரு கணத்தில் இளக்கி புளகாங்கிதமாக்கிவிட முடியும் என்பதில் ஐயமில்லை.

'சுதந்திரம் வந்து விட்டது; எனவே சுதந்திரப் பாடல்கள் தேவையற்றுப் போய்விட்டன' என்று கூறி வரும் பெரியார்களும் அவர்களின் வழித் தோன்றல்களும், சுதந்திரத்திற்கும், பாரதியின் சுதந்திரம் பற்றிய கண்ணோட்டத்திற்கும் நேர்மையான மதிப்புக் கொடுத்து, ஆழ்ந்து சிந்தித்து, இவ்வாறு கூறுகிருர்கள் என்று தெரியவில்லை.

நமது சுதந்திரம் உறுதியும் வளமையும் அடையும் தோறும், பாரதி கண்ட சுதந்திரம் 'விரிசோதி'யாக நமக்கு விளங்கும் என்று எனக்குப் படுகிறது. பாரதி இலக்கியமும் எனது கருத்தையே உரம் செய்கிறது.

பாரதியின் முப்பெரும் பாடல்கள் மாதிரி நிறைந்த கவிச்சுவை மிக்க பாடல்கள் தேசியப் பாடல்களிலும் பல இருக்கின்றன. தமிழ்ப் பெரு மக்களின் கவிதைச் சுவை உணர்வும், சுதந்திரத்தைப் பற்றிய தெள்ளறிவும் நாட்டன்புக் கனிவும் பெருகப் பெருக, தேசியப் பாடல்கள் காலங் கழிந்து விட்டன என்ற பிரசாரத்தின் மாய்மாலம் பட்டப் பகல் வெட்ட வெளிச்சம் ஆகும்.

# அவனே கலைஞன்!

"இருங்கலைப் புலவனுக்குதி" என்று பாஞ்சாலி சபதத்தில் பாரதி பராசக்தியை வேண்டுகிறான்.

"உண்மையிலே தவறாத புலவர்", "தொன்று நிகழ்ந்த தனைத்தும் உணர்ந்திடும் சூழ்கலை வாணர்கள்", "கொள்ளை இன்பம் குலவு கவிதை கூறுபாவலர்",

"கவிதையும் அருஞ்சுவைக் கானநூலும்
புவியினர் வியக்கும் ஓவியப் பொற்பும்
மற்றுள பெருந்தொழில் வகைகளில் பலவும்
வெற்றி கொண்டிலங்கிய மேன்மையார்"

இத்தகைய கலைஞர்கள், புலவர் பெருமக்களை நினைந்து நினைந்து அவர்களிலும் பெரும் கலைஞனை வேண்டுமென்று பாரதி பராசக்தியை வேண்டுகிறான்.

"கானத்திலே அமுதாக நிறைந்த கவிதை", "தெய்விக சாகுந்தலம் எனும் நாடகம் ........அயன் செய்வதனைக் குறிப்புணர் - அருள் கவிதை".

"கல்லையும் தீயையும் சேர்த்தே – நல்ல
காற்றையும் வான வெளியையும் சேர்த்தே
தெள்ளு தமிழ்ப் புலவோர்கள் - செய்த
தீஞ்சுவைக் காப்பியம்"

"காவிய நூல்கள் ஞானக் கலைகள்", "சுவை புதிது, பொருள் புதிது, வளம் புதிது, சொற் புதிது, சோதிமிக்க

நவகவிதை என்றும் அழியாத மகாகவிதை,'' "சாரத் திலே மிகு சாத்திரம்''

கள்ளைக் கடலமுதை நிகர்
 கண்டதோர் பூந்தமிழ்க் கவி''
''புத்தம் புதிய கலைகள் - பஞ்ச
 பூதச் செயல்களின் நுட்பங்கள் கூறும்–
 ...............அந்த மேன்மைக் கலைகள்''

இத்தகைய கவிதைகள், கலைகளை மனம் சிவக்கச் சிந்தித் துச் சிந்தித்துப் பராசக்தியிடம் வரம் வேண்டுகிறான்,

''ஆணிமுத்துப் போன்ற மணிமொழிகள்'', ''மந்திரம் போன்ற சொல்லின்பம்'', ''வீரத் தமிழ் சொல்லின் சாரம்.''

''சொன்னலமும், பொருள்நலமும் சுவைகண்டு
 சுவைகண்டு துய்த்துத் துய்த்து
கன்னலிலே சுவையறியும் குழந்தைகள் போல
 தமிழ்ச் சுவை களிக்குந் திறன்''

''...............சிந்திப் பார்க்கே
களிவர ஆனந்தக்கனவு பல காட்டல், கண்ணீர்த்
துளிவர உள்ளுருக்குதல்''
''வையத்தைப் பாலித்திடும் பாட்டுத் திறன்''

இவைகளெல்லாம் பொங்கிப் பெருக்கெடுத்தோடத் தன் னிடம் வந்து அமைய வேண்டும் என்று பாரதி விரும்பு கிறான்.

எனவே, 'கம்பன் இசைத்த கவியெலாம் நான்' என்று முழங்குகிறான்.

''...........காற்றே! உன்னைக் குதிரை கொண்டேறித் திரியும் ஓர் உள்ளம் படைத்து விட்டேன்'' என்று பெரு மிதம் கொள்கிறான்.

"சீதக் கதிர்மேல் சென்று பாய்ந்து அங்கு தேனுண்ணு வாய் மனமே!" என்று மனக்குதிரையைத் தட்டிவிடுகிறன். தட்டிவிட்டு,

"சீரவிரும் சுடர் மீநெடு வானத்துத்
திங்களையும் சமைத்தே
ஓரழகாக விழுங்கிடும் உள்ளத்தை
ஒப்பதோர் செல்வமுண்டோ?

"பாட்டினில் அன்பு செய்" என்று புதிய தமிழனுக்கு அறிவுறுத்துகிறன்.

"வீடுதோறும் கலையின் விளக்கம்" வேண்டும் என்று நவயுக ஜனநாயகக் கொள்கைப் பிரகடனம் செய்கிறன்.

"ஆடுதல் பாடுதல் சித்திரம் கவி
யாதியினைய கலைகளில்- உள்ளம்
ஈடுபட் டென்றும் நடப்பவர் – பிற
ஈனநிலை கண்டு துள்ளுவார் – அவர்
நாடும் பொருள் அனைத்தையும் - சில
நாளினில் எய்தப் பெறுகுவார்"

இவ்வாறு புது உலக வருங்கால மனிதனை உருவாக்கிக் காட்டுகிறன். இந்தப் புதிய மனிதனை உருவாக்குவதில்

"சொற்படு நயமறிவார் - இசை
தோய்ந்திடத் தொகுப்பதின் சுவை அறிவார்
விற்பனத் தமிழ்ப் புலவர்"

என்கிறன் பாரதி.

மேற் சொன்னவைகளில் பாரதி தனது கலை உணர்வை, கவித்துவத் திறனை, கருத்துக்குவைப் பேராற்றலோடு படம் பிடித்துக் காட்டுகிறன்.

மனித வர்க்கத்தின் வரலாற்றில் இந்த நூற்றுண்டைப் போல் வேறு எப்பொழுதும் சமுதாய உணர்வு இவ்வளவு

ஆழமும், அகலமும் பெற்று இருந்ததில்லை. சரித்திர-சமுதாய உணர்வு விரிவில், ஆழத்தில், புதுமையில் பாரதியின் அருகாமையை எட்டியவர்கள்கூட இந்த நூற்றுண்டில் தமிழகத்தில் இல்லை, இதில் அவனுக்கு அவனே நிகர். பிரபஞ்சத்தை, சமுதாயத்தை, மனப்பரப்பைக் காண்பதில் பாரதியின் பார்வை பேராற்றல் மிக்க தொலைநோக்கி (டெலஸ்கோப்)யாகவும், நுண்ணுருநோக்கியாகவிம் (மைக்ராஸ்கோப்) விளங்கிற்று. அபூர்வமான பெரிய பெரும் கலைஞனிடம்தான் இந்தப் பார்வை காணக் கிடக்கும்.

சொல் வளத்தால், நடை வளத்தால், கற்பனை வளத்தால், கட்டுக்கோப்பு வளத்தால், கருத்து வளத்தால் படிப்போர் கேட்போரைத் தேன் குடித்த நரி போல் ஒரு கலைப் படையலுக்குச் சொக்கடிக்க முடியும் சிறப்புக்கள் இருந்தால் மட்டும் போதாது. அந்தப் படையலுக்குப் படிப்போர் கேட்போரின் உணர்ச்சியைக் கலக்கி மறித்து, புதுவாழ்வை உருவாக்கும் போராட்டத்தில் முழுமூச்சுடன் குதிக்கும் ஆற்றல் இருந்தால்தான் அது தலை சிறந்த இலக்கியப் படையல் என்று கூற முடியும். புதிய உணர்ச்சிகளைத் தூண்டி, ஆற்றுப் பெருக்காக ஓடவிட்டு, தனிமனிதனையும் சமுதாயத்தையும் உரிய வாழ்வில் ஏவி ஊக்குவித்த கலைஞன் பெருமான் பாரதி.

"காலத்தின் கூத்தினைக் கண்முன்பு கண்டு" மழையை பற்றிய பாடலையும், தமிழ் இலக்கியத்திலேயே, ஏன், உலக இக்கியத்திலேயே பேராற்றல் மிக்க ஒரு சில பாடல்களில் ஒரு பாட்டான 'ஊழிக்கூத்தை'யும், பாஞ்சாலி சபதத்தின் சில பகுதிகளையும் சுவைக்கத் தொடங்கினுல்' பாரதி தமிழ்ச் சொல்லில் அருளிய இணையற்ற பயங்கரப் பேராற்றல் உணர்ச்சி புலனுகும். கம்பனே தமிழ் என்ற தமிழ்க் கொடுமுடியான கம்பன் காப்பியத்தில் அதன் கொடுமுடியாக விளங்கும் யுத்த காண்டத்தில் "ஊழிக்கூற்று"ப்

போன்ற ஒரு தனிப் பாட்டு அத்தனை வேகத்தையும், புயலையும், பயங்கரத்தையும் வாழ்வையே கலக்கி மறிக்கும் உணர்ச்சி ஆவேசத்தையும் தரமுடியுமா என்பது சந்தேகத்திற்குரியதுதான்.

பேசும் பொற்சித்திரத்தை, பிள்ளைக் கனியமுதை, ஏடுகள் சொல்ல இயலாத இன்பக் கதையை, சின்னஞ்சிறு கிளியை அவன் பாடியிருக்கும் அற்புத நல்லிசைப் பாடலோவியம் உலக இலக்கியத்தில் ஒரு பாட்டாகும். குயில் பாட்டின் காதல், கலித்தொகையை, குறுந்தொகையை, காமத்துப்பாலை, கற்கண்டுக் கோவையாரை, அவற்றின் கரை கடந்த அன்பு - இன்பச் சுவையை நுண்ணறிவுடன், பழகு தமிழில் கவிதை மணக்க விளக்கிச் செல்வதோடு மட்டுமின்றி, நவயுகத்தின் குரலையும், பொருளையும் புதுமையுறக் குழைத்து நல்விருந்து அளிக்கிறது. பாஞ்சாலி சபதத்தைத் தனியாக அறிமுகப்படுத்தியுள்ளேன். கண்ணன் பாட்டைக் கூர்ந்து படித்தால் மனவுலகத்தில் பாரதிக்குரிய ஆழ்ந்த சஞ்சார விஸ்தாரம் தெரியும். தனிப்பாடல்களில் பல பாடல்கள் அமர சித்திரங்கள்.

இந்த இதழில் இந்தத் தடவை அவனது உரை நடையில் காணும் பல்வேறு கூறுகள் ஆய்வுக்கு இடம் பெற்றுள்ளன. கவிதையால் மட்டுமல்ல, உரைநடையாலும் தமிழுக்குப் பணி புரிந்ததில் அவன் எல்லோருக்கும் முன்னணி வீரனுகவும், உயர் வழி காட்டியாகவும் நமது வணக்கத்திற்கேற்ற வண்ணம் விளங்குகிறுன். அவனுடைய கட்டுரைத் தொகுப்புக்களைப் படித்தால் கலை இலக்கியத் துறையில், ஏன், வாழ்க்கையின் பல துறைகளிலும்கூட அவன் எந்தத் துறையில் ஜனநாயக வெளிச்சம் போட்டுக் காட்டவில்லை என்ற கேள்வி பிறக்கும்? இவ்வளவு குறுகிய காலத்தில் இத்தனை துறைகளில் புகுந்து, இத்தனை கலை உருவங்கள் கொடுத்து, இத்தனை

தனி முத்திரையையும், அழகையும் கண்டு காட்டிய வள்ளல் - கலைஞன் - கவிஞன் - புலவன் - சான்றோன்வேறு யாரேனும் உண்டா? இல்லை, இல்லை, இல்லை என்றே சொல்லத் துணிகிறோம்.

மனிதனை, மனித வாழ்வை முழு நிறையாகக் காண, கண்டு காட்ட முழு மூச்சோடு முயன்ற அம் முயற்சியில், தன்னைக் கரைத்துக் கொண்ட கலைஞன் பாரதிதான். எனவே அவனே கலைஞன்.

இந்த மலரில் பாரதியை, அவனது பல்வேறு துறைச் சாதனைகளை, ஜனநாயக ஒளியில் கண்டு, காட்ட பல கலை இலக்கிய அன்பர்கள் ஈடுபட்டிருக்கிறார்கள்; கட்டுரைகள் வழங்கியுள்ளார்கள். தமிழகத்தில் இதுவரையில் இம் மாதிரி நன்முயற்சி நடைபெற்றதில்லை என்று தன்னடக்கத்துடன், ஆனால் அழுத்தந்திருத்தமாகக் கூற விரும்புகிறோம். இந்த மலரைச் செழுமை செய்த நல்லன்பர்களுக்கெல்லாம் எமது வணக்கம். செப்டம்பர், அக்டோபர் இரு மாதங்களிலும் பாரதி விழாவைத் தேசியந் திருவிழாவாகக் கொண்டாடி, பாரதி இலக்கியத்தையும், அதன் விமர்சன இலக்கியத்தையும் தமிழ்ப். பெருமக்கள் நன்கு பயன்படுத்திக் கொள்வார்கள் - கொள்ள வேண்டும் என்றும் பணிவன்புடன் வேண்டிக் கொள்கிறோம்.

பாரதி வாழ்க! பாரதி தமிழ் வாழ்க!

# சின்ன சங்கரன் கதை

## ஒரு குறிப்பீடு

பாரதியின் 'சின்னச் சங்கரன் கதை' தமிழில் ஒரு தனி நூல். இது போன்ற ஒரு நகைச்சுவைக் களஞ்சியம் - ஒரு கிண்டல் கருவூலம் - இதற்கு முன்பும் இருந்ததில்லை; பின்பும் எழுந்ததாகத் தெரியவில்லை.

சின்னச் சங்கரன் கதையை 30 அத்தியாயங்களாகப் பாரதி எழுதி முடித்ததாகத் தெரிய வருகிறது. தேசபக்தப் பெரியார் **சுப்பிரமணிய சிவா** நடத்திய **ஞானபாநு** என்ற திங்களிதழில் 1913 - 14 ஆண்டுகளில் தொடர்ச்சியாக அல்ல - விட்டு விட்டு ஏழு அதிகாரங்கள் வெளியிடப்பட்டதாகச் சொல்லப்படுகிறது. ஆனால் இன்று நமக்குக் கிடைப்பது நான்கு அதிகாரங்களைக் கொண்ட ஒரு சிறு நூலே.

தமிழன் செய்த 'பாவம்' நூலின் பெரும்பகுதி களவாடப்பட்டுக் காணமல் போயிற்று.

கிடைத்துள்ள நான்கு அத்தியாயங்களைக் கொண்டே நூலின் தனிப் பெருமையைக் கண்டுகொள்ள முடியும்.

தமிழிலக்கியத்தில் பாரதியின் எழுத்துக்களிலிருந்து தான் நகைச்சுவை இலக்கியம் தொடங்கிற்று என்று யாரும் சொல்லக் கனவிலும் நினைக்க மாட்டார்கள். தொல்காப்பியமே நகைச்சுவை இலக்கணம் கூறுகிறது. வள்ளு

வன் 'கயமை' அதிகாரத்திலும், கம்பன் கும்பனைப் பற்றிச் சித்திரிக்கும்பொழுதும் உயர் தர நகைச்சுவை நம்மை ஆட் கொள்ளுகிறது. இவ்வாறு நெடுகலும் உயர் தனிச் செம்மை சான்ற இலக்கியங்களிலெல்லாம் ஆங்காங்கு நகைச்சுவை விருந்து நடைபெறுவது நாம் ருசிக்க முடியாததல்ல.

பிற்காலத்தில் காளமேகத்தின் பாடல்களிலும் பிள்ளைப் பெருமாள் அய்யங்காரின் தனிச்செய்யுள்சிந்தாமணியிலும் புலவர் பலரின் படையல்களிலும் நகைச்சுவையும் கிண்டல் உணர்ச்சியும் மின்னுவதைக் காண முடிகிறது.

பாரதியின் சின்னச் சங்கரன் கதை கவிதையோ பாடலோ அல்ல. ஆனால் இது ஓர் உரைநடை நூல்.

உரைநடை நூல்களிலும் வீரமா முனிவரின் **பரமார்த்த குரு கதை** அளிக்கும் நகைச்சுவை விருந்தை எந்தத் தமிழ னும் மறக்க கூடியாது. வேதநாயகம் பிள்ளையின் **பிரதாப முதலியார் சரித்திரத்தி**லும் ராஜம் அய்யரின் **கமலாம்பாள் சரித்திரத்தி**லும் நகைச்சுவை தென்படுகிறது.

ஆனால் பாரதியின் சின்னச் சங்கரன் கதை ரகத்திலும், தரத்திலும் வேறுபட்டது என்பது என் கருத்து.

## தனிச் சிறப்பு என்ன?

சின்னச் சங்கரன் கதையைத் திரும்பத் திரும்பப் படித்த எனக்கு படித்த நான்கு அத்தியாயங்களிலிருந்தும் ஏற்படு கிற எதிரொலிகள் பின்வருவனவாகும்:

### ஒன்று

சின்னச் சங்கரன் கதையில் பக்கத்துக்குப் பக்கம்கூட அல்ல, வரிக்கு வரி கிண்டல் காணக் கிடைக்கிறது. நூல் முழுவதிலும் வேறு எங்கும் காணக் கிடையாத விதத் தில் கருத்துக்குக் கருத்து நிகழ்ச்சிக்கு நிகழ்ச்சி தொடர்ந்து

கிண்டல் இழைகிறது. இதுதான் இந்த நூலின் தனிப் பெருமையும் புதுமையும்.

இரண்டு

இந்த நூலில் காணப்படும் கிண்டல்களும் கொச்சை பச்சையான மட்டரகமான கிண்டல்கள் அல்ல.

மூன்று

வாசகனைச் சிரிக்க வைக்க வேண்டும் என்ற சிறு நோக்கோடு வெளியிடப்பட்ட கிண்டல் இதில் ஒன்றுகூட இல்லை கிண்டலுக்காகக் கிண்டல் என்கின்ற செயற்கைக் கிண்டல் இதில் மருந்துக்கும் இல்லை. இதில் காணப்படும் கிண்டல் கள் அனைத்தும் இயல்பாகவே பிறந்து பரிமளிக்கின்றன.

நான்கு

நிலப்பிரபுத்துவச் சமுதாய அமைப்பை, அதன் கேடுகளைப் பொதுமைப்படுத்தி (typical) குணச்சித்திரப் பாத்திரங்களாக்கி அவற்றைக் கிண்டல்களால் பாரதி பல்வேறு கோணங்களிலிருந்து சல்லடைக் கண்களாகத் துளைக்கிறான். தனது சமூக, சமுதாய உணர்வுத் திறனை (Social Consciousness) இந்த நூலில் தெளிவாகவும் கூர்மையாகவும் வெளிப்படுத்துகிறான். நிலப்பிரபுத்துவ அமைப்பு, நடமாட்டம், பழக்க வழக்கங்கள் ஆகியவற்றின் நேர் எதிரியாக இந்த நூலில்தான் பாரதி காட்சியளிக்கிறான்.

இப்படியாக ஒரு (நிலப்பிரபுத்துவ) சமுதாயத்தின் நசிவுத் தன்மை முழுவதையும் அழுகல் தன்மை அனைத்தையும் கிண்டலுக்கு இரையாக்கிய ஒருநூல் தமிழில் இல்லவே இல்லை என்பதே எனது கருத்து.

ஐந்து

பழகு தமிழ், கிராமியச் சொற்கள் கலந்த நடை, எளிய ஜன ரஞ்சகப் பாணி, நாட்டுப் புறத்தில் நித்த நித்தம்

நேருக்குநேர் சந்திக்கும் பாத்திரங்கள் முழுந்றைக் கிண்டல்; இப்படி ஒரு நூலைச் சிந்தித்துப் பாருங்கள். அப்பொழுது சின்னச் சங்கரன் கதையில் நான் காணும் தனிச் சிறப்பை நீங்களும் காண்பீர்கள்.

ஆறு

சின்னச் சங்கரன் கதைக்குப் பகைப்புலன் அதாவது பின்னணி, எட்டையபுரம் ஜமீன் வாழ்வு. ஏன் என்றால் பாரதிக்கு நேர் அனுபவம் எட்டையபுரம் ஜமீன்தான். பாரதி மன்னனை மதியாத குடியரசுக் கொள்கை உடையவன். எட்டையபுரம் வாசியான சுப்பராம தீட்சதர் மறைந்தபோது பாடிய பாட்டில் "மன்னரையும் பொய்ஞான மதக்குரவர் தங்களையும் மதிக்கலாதேன்" என்று அவன் பாடுவதே இதற்கு ஏற்ற சான்று. மேலும் 'சுதந்திரப் பள்ளு' பாடுகிற பொழுது,

> உழவுக்கும் தொழிலுக்கும்
> வந்தனை செய்வோம் - வீணில்
> உண்டு களித்திருப்போரை
> நிந்தனை செய்வோம்

என்று பாடுகிறான் பாரதி. சுதந்திர வீரனின் இந்தக் கடமை சின்னச் சங்கரன் கதையில் நூற்று வீதம் வெற்றி கரமாக அமுலாகிறது.

கதையினுள்................

கதையில் வரும் பாத்திரங்களில் குறிப்பிடத் தக்கவர்கள் சங்கரன், ஜமீன்தார் ராமசாமிக் கவுண்டர், கவுண்டர் திருச்சபை உறுப்பினர்கள் முதலியோர்.

சங்கரன் பிஞ்சில் பழுத்தவன். "சின்னச் சங்கரன், சங்கரன், சங்கரய்யர், சங்கரநாராயணய்யர், சங்கரநாராயண பாரதியார், இத்யாதி, இத்யாதி" என அவன் கதைப் போக்கில் வளர்ந்து கொண்டே போவான். அவன் படித்த தெல்லாம் ஒரே சாஸ்திரம், ஒரே கணக்கு. அவனுக்கு ஒரே வழிதான் இருந்தது. "சாற்றுவதும் காமக்கலை, சாதிப்பதும் போற்றுவதும் காமனடிப்போது" - இதைக் கொண்டே கதை நிகழிடமாகிய கவுண்டனூரில் இருந்த 'புலவர்' கூட்டத்திலே ஒருவனாகி விட்டான்.

கவுண்டனூர் மக்களால் 'மகாராஜா' என அழைக்கப் படும் ஐம்பது வயதான, ஜமீந்தார் ராமசாமிக் கவுண்டர் இவர்தான்; '....நல்ல கருநிறம், நரைபாய்ந்த மீசை, கிருதா, முன்புறம் நன்ருகப் பளிங்கு போல் தேய்க்கப்பட்டு நடுத் தலையில் கவடு பாய்ந்து பின்புறம் ஒரு சிறிய முடிச்சுப் போட்டு விளங்கும் முக்கால் நரையான தலை. நெடுந்தூரம் குழிந்த கண்கள். இமைப் புறங்களில் 'காக்கைக்கால்' அடையாளங்கள். பொடியினுல் அலங்கரிக்கப்பட்ட மூக்கு. வெற்றிலைக் காவியினுலும் புகையிலைச் சாற்றினுலும் அலங் கரிக்கப்பட்ட பற்கள், குத்துயிரோடு கிடக்கும் உதடு, ஆபரணங்கள் பொருந்திய செவிகள், பூதாகரமான உடல், பிள்ளையார் வயிறு. ஒரு விதமான இருமல், அரையில் பட்டு ஜரிகை வேஷ்டி, விரல் நிறைய மோதிரங்கள், பக்கத் திலே வெற்றிலை துப்புவதற்கு ஒரு காளாஞ்சி. ஒரு அடைப்பைக்காரன்." பாரதி பிடித்த ஜமீந்தார் கவுண்டரின் அற்புதமான திருவுருக் கோலப்படம்.

அவர் குளிக்கும் காட்சியை நீங்கள் பார்க்கவேண்டாம். அதைச் சுருக்கமாகப் பாரதி "நேபாளத்து ராஜாவின்

பிரதேசத்துக்குக்கூட இந்த உபசாரம் நடக்காது'' என்று கூறுகிறான்.

அவருடைய தர்பாரும் குதிரைச் சவாரியும் கண் கொள்ளாக் காட்சி விருந்துகள்.

''சமஸ்தான வித்வான் அண்ணாத்துரை அய்யர், 'தோடி' நாராயண அய்யங்கார், முடுக்கு 'பல்லவி' வேதாசலக் குருக்கள், தர்க்கலங்கார ஸர்வசாஸ்திர ஸாகர உபய வேதாந்த ப்ரவர்த்தன நிவர்த்தன ஸம்வர்த்தனாசார்ய பெருங்குன்றம் கிடாம்பியாச்சான் ஆம்னோ தரதனாசார்யர், 'முத்தமிழ் சிங்கக் குட்டி' முத்துக் கருப்பண பாவலர், 'கம்பராமாயணப் பிரசங்கம் ஆறுமுகக் கவுண்டர், வேலக் கவுண்டர், மூங்கிலறுப்பு ராமச்சந்திர பாகவதர், அறுபத்து நாலாக்ஷர பிச்சாண்டி பாகவதர், பரமததூஷண ஸ்வமத பூஷண ஸர்வமத பக்ஷாணபூர்ண பஸ்மசிவனவர்கள், தொல்காப்பியம் இருளப்ப பிள்ளை, காமரஸ மஞ்சரி சுந்தரய்யர் -'' இவர்கள்தான் கவுண்டர் சபையை அலங் கரித்த 'அஷ்டதிக் கஜங்கள்', 'நவரத்தினங்கள்', 'பன்னிரு பெரியோர்'.... சுருங்கச் சொன்னால் அந்தச் 'சந்திர'னைச் சுற்றி வட்டமிட்ட நட்சத்திரங்கள்.

அத்தகைய ஜமீந்தார்களைப் பற்றி 'ஊத்தவாய்' திறந்து 'வாயிலே நுரைக்கும்படி' யமகம் முதலியன பாடித் தம்மைப் 'பாணகவி' என்று நினைத்துக் கொண்டிருந்த அந்தக் காலத்துக் கவிராயர்களின் தொழில் பாரதிக்கு வெறுப்பையும் அருவருப்பையும் தந்தது. அந்த உணர்ச்சி களை அவன் நையாண்டியாக வெளியிட்டதை நினைந்து நினைந்து நாம் மகிழலாம்.

இன்னும் கதையில் வரும் கிண்டல் சுவைப் பகுதிகளை மேற்கோள் காட்டுவதென்று ஆரம்பித்தால் நான்கு அத்தியாயங்களையும் அப்படியே பார்த்துத் திருப்பி எழுதிவிட வேண்டியேற்படும்.

எனவே நூல் முழுவதையுமே உங்கள் முன் வைக்கிறேன்.



# பாரதி விழாச் சொற்பொழிவு

அன்பும் அறிவும் மிக்க தலைவர் அவர்களே,

சகோதர சகோதரிகளே,

இந்த பாரதியின் 81 - வது பிறந்த நாளைய விழாவில் பங்கு கொள்ளும் வாய்ப்புக் கிடைத்ததற்காக நான் பெரிதும் மகிழ்ச்சி அடைகிறேன். தாகூர் நூற்றாண்டு விழாவிற்குச் சென்றபோது, அங்கு பாரதப் பெருமக்கள் காட்டிய பேருணர்ச்சியைப் பார்த்தபோது, தமிழ்நாட்டில் பாரதியின் பிறந்த நாளை மையமாக வைத்து, அந்த ஒற்றுமையுணர்ச்சியை எல்லா மாகாணங்களிலும் எழுப்பும் வகையில் ஒரு விழா எடுக்க வேண்டுமென்ற எண்ணம் எங்களுக்குத் தோன்றியது. அதில் நண்பர் திரு. அகிலனும் ஒருவர். அது வர வர விரிவடைந்து, நாமெல்லாம் பாராட்டத் தகுந்த விதத்தில், பெருமையும் மகிழ்ச்சியும் கொள்ளத்தக்க விதத்தில் அரசாங்கத்தினராலேயே முன்முயற்சி எடுக்கப் பட்டு, நடைபெறும் இந்தப் பாரதியின் பிறந்த நாள் விழா விலே பங்கு கொள்ளும் பெரும் பேறு கிடைத்ததற்காக நான் பெரிதும் பெருமைப்படுகிறேன். இந்த விழாவில்

நிற்கிறபோது, எனக்குப் பாரதியைப் பற்றி ஏற்படக்கூடிய சில எதிரொலிகளை உங்கள் முன் வைக்க விரும்புகிறேன்.

பாரதி தமிழ் மண்ணில் பிறந்தான். தமிழகத்தில் தங்கி, அவன் உலகத்தைத் தன்னதாக்கிக் கொண்டு வளர்ந்தான். பாரதி பல தத்துவங்களை உண்டு, அவனுக்கு வேண்டிய ஒரு சூழ்நிலையை வகுத்துக்கொண்டான். அதே காலத்தில் உலகத்தோடும் ஒட்டி வாழ்ந்தான், வளர்ந்தான். அவன் உலகத்திற்கு ஒரு பெரிய தத்துவ மரம் என்றே எனக்குப் படுகிறது. அவன் கவிதைகளை எடுத்துக்கொண்டாலும் சரி, கட்டுரைகளை எடுத்துக்கொண்டாலும் சரி, அவைகளிலே சென்ற நூற்றுண்டிற்கும், இந்த நூற்றுண்டிற்கும் உலகத்தில் சிறந்து விளங்கக்கூடிய ஜனநாயகப் பண்பாட்டை நாம் பார்க்க முடிகிறது. அதோடு மட்டுமல்லாமல், தமிழ் நாட்டின் சமுதாய வரலாற்றோடு வர வர வளர்ந்து செல்கிறுன். நமது பாரத சமுதாயம் வரலாற்று ரீதியாக வளர்ந்துகொண்டே போகக்கூடிய வளர்ச்சியின் அடிப்படையில் கணக்குப் போட்டு வந்த வகையிலே பல் வேறு பொருள்களை நமக்கு எடுத்துக்காட்டுகிறுன்.

அதனுல்தான் இன்று இந்த அளவுக்கு நமது பாரத சமுதாயம் வளர்ந்து வந்திருக்கிறது. அவனது பாடல்களிலே தனிப்பட்ட ஒரு கருத்து முத்திரையை அவன் வைத்தான். அதே சமயத்தில் அவன் உலகத்தையும் எட்டிப் பார்த்தான். தமிழைப் பார்த்தான். தமிழ் நாட்டு மக்களைப் பார்த்தான். ஆனுல் அதே நேரத்தில் பாரத நாட்டின் பெருமையையும் ஒட்டு மொத்தமாகப் பார்த்தான். உலகத்திலே உள்ள மனித வர்க்கம் எப்படி வாழ வேண்டு

மென்று அவன் வழி காட்டுகிறான். இந்திய மக்கள் அனைவரும் எப்படி ஒன்றுபட்டு, ஒருமைப்பாட்டு உணர்ச்சியோடு வாழ வேண்டுமென்று கூற வந்தவன், அதோடு மட்டும் நிற்காமல் உலகத்திலுள்ள எல்லா மக்களும் எப்படி வாழ வேண்டுமென்று வழி காட்டுகிறான் என்கிற கருத்தைத் தான் நான் இன்றைக்கு உங்களுடைய கருத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன்.

பாரத நாட்டின் சுதந்திரத்திற்கு அவனது கவிதைகள் பெரிதும் நமக்கு உதவின. சுதேசிக் கிளர்ச்சியில் ரத்தம் கொதிக்கும் வகையில் எழுச்சி ஏற்பட அவனது பாடல்கள் நம் இயக்கத்திற்கு உதவி செய்தன. 1924-ல் போராட்டம் ஏற்பட்டபோது, அவனது "தாயின் மணிக்கொடி" பாடல் நமக்குப் பெரிதும் உதவியது. அதிலே இந்திய மக்கள் தங்கள் கொடியினைக் காக்க எப்படி இருக்க வேண்டுமென்று சிறந்த முறையில் விளக்கியிருக்கிறான். அதற்குப் பிறகு, 'அச்சமில்லை, அச்சமில்லை' என்ற பாடலின் மூலமாக நம் கண்களில் ஒளி பிறக்கச் செய்கிறான். பின்னர் நமக்குச் சுதந்திரமும் கிடைத்தது. அதற்கும் அவன் தனது தீர்க்க திருஷ்டியின் மூலமாக ஒரு பாட்டைச் சமைத்துவைத்தான். அதுதான், "ஆடுவோமே பள்ளுப் பாடுவோமே, ஆனந்த சுதந்திரம் அடைந்து விட்டோம்" என்பது. பின்னால் நாட்டிலே நடக்கக்கூடிய காட்சிகளையெல்லாம் சித்திரித்துக் காட்டுகிறான். அதோடு மட்டுமல்ல. 'தேசிய இன எழுச்சியின் சிறப்பைப் பற்றியும், செந்தமிழின், செந்தமிழ் நாட்டின் சிறப்பைப் பற்றியும் விளக்கியிருக்கிறான். சுதந்திரம் கிடைத்து விட்ட பிறகு நாம் செய்ய வேண்டிய

தொழில்களைப் பற்றியும் குறிப்பிட்டு இருக்கிறான். "இரும்பைக் காய்ச்சி உருக்கிடுவோமே" என்று நாம் சுதந்திரம் அடைந்து விட்ட பிறகு செய்ய வேண்டிய தொழிலைப் பற்றியும் தீர்க்க தரிசனமாகக் கூறியிருக்கிறான். அப்படிச் சுதந்திரம் கிடைத்த பிறகும், இந்தப் பாரத நாட்டி லுள்ள எல்லாக் கட்சிகளும், மக்களும் நன்கு வாழவேண்டும் என்று வாழ்த்தும் முறையிலே "பாரத சமுதாயம் வாழ்கவே" என்று நமது பாரத சமுதாயம் அனைத்தையும் வாழ்த்தியும், பாராட்டியும் இருக்கிறான். இதைத் தவிர, இன்னும் அவ்வப்போது, அந்தக் காலத்திலே எழக்கூடிய பிரச்னைகளுக்குத் தீர்வு காணும் முறையிலேயும் கவிதை களை இயற்றி இருக்கிறான். "மன்னும் இமயமலை எங்கள் மலையே" என்று இப்போது நம்மிடையே எழுந்துள்ள பிரச்னைக்கும் தீர்வு காணும் முறையிலே கவிதை இயற்றி யிருக்கிறான். இதனால்தான் அவன் பாடல்களை, "The Song of Songs" என்று கூற வேண்டுமென்று எனக்குத் தோன்றுகிறது.

பாரதி இந்தப் பாரத நாட்டோடு மட்டும் நிற்காமல் உலகத்தில் ஒற்றுமையைப் பற்றியும் பாடியிருக்கிறான்.

"ஒன்றென்று கொட்டு முரசே - அன்பில்
ஓங்கென்று கொட்டு முரசே
நன்றென்று கொட்டு முரசே — இந்த
நானில மாந்தருக் கெல்லாம்"

என்று நமக்கெல்லாம் ஒரு சீரிய காட்சியை அவன் இந்தக் கவிதையின் மூலம் நமக்குக் காட்டியிருக்கிறான். பாரத சமுதாயத்தின் ஒற்றுமையைப் பற்றிப் பாடிய அவன்,

அதே சமயத்தில் உலகத்தையும் தன் விஸ்வப்பார்வையால் பார்க்கிறுன். அதோடு நில்லாமல்,

> ''காக்கை, குருவி எங்கள் ஜாதி – நீள்
> கடலும், மலையும் எங்கள் கூட்டம்;
> நோக்குந் திசையெலாம் நாமன்றி வேறில்லை
> நோக்க நோக்கக் களியாட்டம்''

என்று உலகத்திலுள்ள எல்லா ஜீவராசிகளையும் கூட அவன் ஒன்றுகப் பார்க்கின்றுன். இத்தகைய தேசியத்திற்கு நாம் ''என்ன இயம்'' என்று சொல்வது? அவனது அகண்டாகார விஸ்வப் பார்வையில் எல்லாத் தேசீயமும் அடங்கியிருக்கிறது. பாரத நாட்டின் தேசியம் மட்டுமல்ல; உலகத்தின் தேசீயம் மட்டுமல்ல; இந்தப் பிரபஞ்சத்தின் தேசீயமே அதில் அடங்கியிருக்கிறது. ''தன்னில் உலகத்தையும், உலகத்தில் தன்னையும்'' காண்பவன் அவன். இதைத்தான் நான் அவனிடத்தில் காண முடிகின்றது. பாரதியின் கவிதைகளில், பாடல்களில் அரசியல், விஞ்ஞானம், சரித்திரம், அறம், வீரம் இன்னும் எவை எவையெல்லாம் உண்டோ அவையெல்லாம், அவை அத்தனையும் புகுத்தியிருக்கிறுன். அதோடு, வள்ளுவம், கீதை போன்றவற்றையும் நமக்குக் குழைத்து அதனுள் புகுத்தித் தந்திருக்கிறுன்.

1904-ல் கவிதை எழுத ஆரம்பித்த பாரதி, 1921-ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 11-ம் தேதி நம்மை விட்டு மறைந்தான். இந்த 17 ஆண்டுகளில் பாரதி வளர்ந்துள்ள

அளவுக்கு உலகத்திலே எவன் வளர்ந்தான்? அவன் அடர்ந்து, படர்ந்து, விரிந்து, சிறந்து விளங்குவதைப் போல், இந்த உலகத்திலே யாருமே வளரவில்லை, விளங்க வில்லை என்று துணிவோடு சொல்லவும், கேட்கவும் தோன்றுகிறது. அப்படி வளர்ந்து விட்டான் அவன். அதனாலேதான் காலம் செல்லச் செல்ல, காலம் போகப் போக அனைத்து அற்புத, தெய்வீகக் கருத்துக்கள் இன்றைக் கும் உண்மையாகிக் கொண்டே வருகிறது. 'ரிக்' வேதத் தைக் காட்டி, 'உண்மை வெல்லும்' என்று சொல்கிறான். ஊழிக்காலத்தில், பாரதி தேவியை ஒரு புறம் சிவகாமியாக வும், அழகான ரூபமாக, சிருங்காரத்தின் சொரூபமாகச் சித் திரிக்கிறான். மறுபக்கம், பராசக்தியைப் பத்திரகாளியாகச் சித்திரிக்கிறான்-படுபயங்கரமான முறையிலே. ஆக, அவன் அமைதியையும் பார்க்கிறான். போரையும் பார்க்கிறான். அப்போர் சிறுமைப் போராக இல்லாமல், தரம் கெட்ட போராக இல்லாமல், மேலும் மேலும் மனிதனை அமர நிலையில் வைக்கத் தக்க போராக மாற வேண்டுமென்பதற் காக, அதற்கு வீரமும், ரூபமும் ஒருங்கே இணைய வேண்டு மென்று அப்படிப் பாடியிருக்கிறான். அவன் தன் கவிதை கள் மூலம் மனிதனை ஒரு முழு வீரனாகவே மாற்றுகிறான்.

பாரதி சாதியைத் தூள் தூளாக்குகிறான்.

''பார்ப்பானை ஐயரென்ற
காலமும் போச்சே - வெள்ளைப்
பரங்கியைத் துரையென்ற
காலமும் போச்சே - பிச்சை

ஏற்பாரைப் பணிகின்ற
காலமும் போச்சே – நம்மை
ஏய்ப்போருக்கேவல் செய்யும்
காலமும் போச்சே"

என்று இப்படி ஒரு பக்கம் சொல்லிவிட்டு, "நந்தனைப் போல் ஒரு பார்ப்பான் உண்டோ!" என்று அவனைத் துணிவுடன் உயர்த்தியும் கூறியிருக்கிறான். இப்படியெல்லாம் சொல்லிவிட்டு, "பாரத நாடு பாருக்குள்ளே நல்ல நாடு" என்று நாட்டின் உயர்வைப் பற்றிக் கூறுகிறான். அப்பால் உலகத்தைப் பற்றியும் கூறுகிறான். அதற்குப் பிறகு, "ஒன்று பட்டால் உண்டு வாழ்வே, நம்மில் ஒற்றுமை நீங்கில் அனைவர்க்கும் தாழ்வே, நன்றிது தேர்ந்திடல் வேண்டும், இந்த ஞானம் வந்தாற் பின் நமக்கெது வேண்டும்?" என்ற ஒரு உயர்தரமான உணர்வு நமக்கு ஏற்படவேண்டும்; நம்மிடையே அப்படிப்பட்ட ஒரு நிலையான ஒற்றுமை ஏற்பட வேண்டும்; அத்தகைய அமர நிலைக்குச் சாரசரி மனிதனும் உயரவேண்டும்; அதிலே தமிழ் மகன் தலை மகனாக நிற்க வேண்டும் என்று வலியுறுத்திச் சொல்கிறான். எப்படி? இன்று நடக்கும் சீனப்போரை ஒழிக்கப் பாடுபடுவதில் தமிழ்மகன் தலை சிறந்து நிற்க வேண்டும். அதோடு நிற்காமல், 'எல்லோரும் மக்கள், எல்லோரும் மன்னர்' என்று ஒரே லட்சியத்தைச் சொல்லி, 'வில்லினை எடடா, புல்லர்கள் கூட்டத்தைப் பூழ்தி செய்திடடா' என்று நமக்கு ஒரு தெளிவு, அந்தத் தெளிவில் ஓர் உறுதியைக் காண்பித்து, மேலும் மேலும் வளர வளர உயர் வேண்டுமென்று சொல்கிறான். இச்சமயத்தில் நம்மிடையே உள்ள பூசல்களை மறந்து, கூச்சல்களை மறந்து, எல்லோரும் ஒன்று

பட்டு உலகம் எல்லாம் மணம் வீச நின்று, அவன் வழி நடக்க இன்றைக்கு சர்க்காரும், மக்களும் சிறந்த முறையில் ஈடுபட்டிருப்பது நாம் செய்த புண்ணியமல்ல. வள்ளுவன் காலத்திலே, சங்க காலத்திலே உள்ள அத்தனை பேரும் செய்த புண்ணியமாகும். புண்ணியவான்கள் எல்லாம் செய்த புண்ணியம் ஆகும். சில ஆண்டுகளாக நான் சொல்லி வந்த கனவு, இப்போது நனவாகிவிட்டது. லட்சம் மக்களுக்கு மேல் ஊர்வலத்திலே கலந்துகொண்டு, அதிலே யும் புலவர் பெருமக்கள், கலைஞர்கள், மாணவ மாணவிகள், பொதுமக்கள், சகோதர சகோதரிகள், ஆளும் கட்சியினர், ஆளாத கட்சியினர் ஆகிய அனைவரும் கலத்துகொண்டு ஊர்வலம் நடத்தியது எனக்கு ஒரு ஆனந்தக் காட்சியாக இருந்தது.

பாரதி நமக்கெல்லாம் ஒரு சிறந்த வழி காட்டி. பாரதி "கான்ஸியஸ்னஸ்" நமக்கு ஏற்பட வேண்டும். நமக்கு எவ்விதச் சந்தேகம் வந்தாலும், அது சமுதாயப் பிரச்னை யானாலும், அல்லது வேறு எந்தப் பிரச்னை வந்தாலும், பாரதியிடம் சொல்லுங்கள். அவன் அவற்றிற்குத் தெளிவு தருவான்; உறுதி தருவான். பாரதியின் பாடல் களை, அவன் இயற்றியுள்ள கவிதைகளை நாம் துருவித் துருவிப் படிக்கவேண்டும். அவைகளை நாம் நம்முடைய குழந் தைகளுக்கும் மனப்பாடம் செய்து வைக்கவேண்டும். நமது செவிகளுக்கு அமுதூட்டும் முறையில், நெஞ்சிற்கு வீர மூட்டும் வகையில் பாரதி பாடல்கள், கவிதைகள் இயற்றித் தந்திருக்கிறான். அவனது கவிதைகளை, பாடல்களை எல்லோரும் கற்பதற்கு வழி செய்யவேண்டும்.

அடுத்தபடியாக, நெடுநாளாக என்னுடைய நெஞ்சிலே ஒன்று இருந்து வருகிறது. அதாவது பாரதியின் பேரிலே ஒரு சின்னம் வர வேண்டுமென்பது. ஒரு பல்கலைக் கழகம் வர வேண்டும். அதற்குப் பாரதி பல்கலைக் கழகம் என்று நாம் பேரிட வேண்டும். அந்தப் பல்கலைக் கழகத்திலே உலகத்திலே உள்ள எல்லோரும் வந்து, அதிலே பயிலும் அளவிற்கு நாம் அதை வளர்க்க வேண்டும். உலகத்திலே என்னவெல்லாம் "ஃபாகல்டீஸ்" உண்டோ, அவை அத்தனையும் அங்கு ஏற்படுத்திக் கொடுக்க நாம் முன்வர வேண்டும். பாரதி பிறந்த நாடு தமிழ்நாடு, அப்பாரதியின் சின்னமாக, நாம் அவன் பேரிலே கண்டிப்பாக ஒரு பல்கலைக் கழகத்தை ஏற்படுத்த வேண்டுமென்று மீண்டும் நான் கேட்டுக்கொள்கிறேன்.

அப்படி, பாரதியின் பேரிலே ஒரு பல்கலைக் கழகம் நிறுவி, உலகிலுள்ள எல்லோருமே மூக்கின் மேல் விரலை வைக்கும்படியான முறையில் பல்கலைக் கழகம் செயலாற்ற வேண்டும். பாரதி எப்படி ஒரு விஸ்வரூபக் கவியோ, அதேபோல் பாரதி பல்கலைக் கழகமும் ஒரு விஸ்வரூப பல்கலைக் கழகமாகத் திகழ வேண்டும். இப்படி ஓர் எண்ணம் என் நெஞ்சில் படுகிறது என்பதை இந்த நேரத்தில் நாட்டின் கவனத்திற்குக் கொண்டுவந்து, பாரதியின் பாடல்களை, அவனது கவிதைகளை நாம் நாள்தோறும் படித்தால், அவன் நம்முடைய எந்தப் பிரச்னைக்கும் நம்பிக்கை தருவான்; தெம்பூட்டுவான்; முன்னேற வழியும் செய்வான்;

மேலும் நமது சமுதாயம் வளரும் என்று கூறிக்கொண்டு பாரதிக்கும், இங்குள்ள அனைவருக்கும் எனது வணக்கத்தைக் கூறி முடிக்கிறேன்.





---

(1962-ம் ஆண்டு டிசம்பர் மாதம் சென்னை அரசாங்கத்தின் ஆதரவில் நடந்த சென்னை பாரதி ஜெயந்தி விழாவில் பேசியது. அமரர் ஜீவா பாரதியைப் பற்றித் தெரிவித்த கடைசிக் கருத்துரை இதுவே.)

# இந்நூல்

மகாகவி பாரதியாரின் படைப்புகளை புதிய நோக்கில் ஆய்ந்து எழுதப் பெற்ற நூல், 'பாரதியைப் பற்றி ஜீவா' எனும் இக்கட்டுரைத் தொகுப்பு.

ஜீவா வாழ்ந்த காலத்தில் பாரதியைப் பற்றியும் பாரதியின் படைப்புகளைப் பற்றியும் காரசாரமான விமர்சனங்கள் எழுந்தன. பாரதி மகாகவி வரிசையில் இடம்பெறத்தக்க ஒரு மாபெரும் கவிஞன் என்பதனை முதலில் வாதாடி நிறுவியவர் எழுத்தாளர் வ. ரா. ஆவார். அக்காலத்தில் பாரதி எதிர்ப்பாளர்களுக்கு தம் நா வன்மையால் சாட்டையடி கொடுத்துப் பாரதியின் புகழ் பரவச் செய்தவர் தோழர் ஜீவா.

இக்கட்டுரைத் தொகுப்பில் ஜீவாவின் அத்தகைய எழுச்சி மிக்க குரலைப் படித்து உய்த்துணரலாம்.

இந்நூல் எமது மறுபதிப்பு என்றாலும் பாரதி நூற்றாண்டு விழாவினைச் சிறப்பிக்கும் வகையில் வெளிவருகிறது.

NCBH